

(உ) திருநெல்வேலி ஸ்ரீ காந்திமதியம்மை கோவில் தத்துவப் பிரகாச மண்டபம்.

ஓம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு<br>உ. | மெய்கண்டான் ஆண்டு-எாக பங்குனித் திங்கள்<br>1924ஷ மார்ச்சு—ஏப்ரல்மீ | பரல்<br>௫. |


திருச்சிற்றம்பலம்.

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.



## சைவ சித்தாந்த வரலாறு

(சிவநெறி வரலாறு)

(கூ௫-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆரியருள் போர் புரிவோர் அரசராகவும், சமயத் தலைவர் பிராமணராகவு மிருந்தனர். ஆரிய அரசர் தத்துவ ஞானம் உணர்ந்திருப்பின் அவர் தமது கொள்கையை பிராமணர்க்கு அறிவித்து அன்னோர் வழிபாடும் தமது குடிகள் வழிபாடும் அக்கொள்கைக்கு ஏற்புடைத்தாக நிலவும் வண்ணம் ஒழுங்கு

செய்திருப்பர். ஆதலானும் பின் வரும் அரச வாக்கியத்தாலும் பிராமணர் நால்வரும் சென்றடைந்த மன்னன் ஆரிய மன்னன் அன்றென்பதும் அன்றெனவே அவ்வரசன் தமிழ் வேந்தனென்பதும் தெளியப்படும். மேற் குறித்த நான்கு பிராமணரையும் நோக்கி அரசன் கூறியதாவது, 'நீவிர் எம்மிடம் வந்தது வியப்பைத் தருகின்றது; பிராமணன் ஒருவனும் இந்த ஞானத்தை இதுவரை பெற்றதில்லையே' என்பதே.

இனி, ஆகமம் என்பதைப்பற்றி ஒரு சிறிது ஆராய்வோம். ஆகமம் என்னுஞ் சொல் சிவபெருமானிடமிருந்து வந்த ஞான நூலைக் குறிக்கு மென்பர். சிவபெருமான் அவர் ஞானத்தை விஞ்ஞாகலர் பதின்மருக்கும், ருத்திரர் பதினெண்மருக்கும் கூறிய முறையால் ஆகமம் இருபத்தெட்டாயின என்னும் சரிதம் ஒருபுற மிருப்ப, ஆகமங்களை யெல்லாம் சிவபெருமான் உமாதேவியாருக்கு அறிவுறுத்தினர் எனவும் இறைவனது ஐம் முகங்கள் வாயிலாக ஆகமப் பொருளை அறுபத்தறுவர் கேட்டனரெனவும் கூறும் வரலாறுகளுமுள. ஆதிசைவர்க்குக் கோத்திரத் தலைவராகிய அகத்தியர் முதலிய ஐந்து முனிவர்க்குள் நான்கு முனிவர்க்கு அவ்வைந்தாகமங்களையும், ஒருவர்க்கு எட்டு ஆகமங்களையும் ஐம்முகங்கள் வாயிலாக சதாசிவமூர்த்தி அருளியதாகக் கூறுவதுமுண்டு.

இந்நில வுலகத்திலே ஆகமங்கள் 'மன்னுமாமலை மகேந்திர மலையில்' அருளப்பட்டன வென்று ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்திருப்பதாலும் மகேந்திரமலை பொதியத்திற்குத் தென்பாலிருப்பதாக சிவதருமோத்தர முதலிய ஆகமங்கள் கூறுதலாலும், அஃதிருந்த நாடு தமிழ்நாடா யிருந்ததாலும், ஆகமங்கள் முதல் முதல் தமிழிலே அருளிச் செய்யப்பட்டன வென்பது யூகிக்கப்படும். அவற்றின் திரிபுகளே இப்போதுள்ள வடமொழி யாகமங்களென்பர். தமிழிலே ஆகமமென்ற சொல்லானது பலவகைச் சமயத்தார்க்கும் உரிய சாதன நூல்களைக் குறிக்கப் பொதுவகையாகவும் வழங்கும்; அது பரிமேலழகர் உரையிற் காண்க.

இங்ஙனம் கூறியவைகளால் நாம் தெளிதற் குரிய பொருளாவது ஆகமமென்பது ஞான நூலைக் குறிக்கும் ஓர் மொழி எனவும், அதனைப் பக்குவர்க்குத் தமது திரு வருள் வாயிலாக அவரவர் பக்குவத்திற் கேற்ப உணர்த்த அன்னோர் செய்த நூல் ஆகமமாமெனவும், அவ்வாறெழுந்த உயர் நூல் உஅ எனவும், அவற்றிற்குத் தலைவர் ஐம்முனிவரெனவும் யூகிக்கப் படும்.

பண்டைச் செந்தமிழ் அருள் நூல்கள் மறைந்தபின்னர் வடமொழி வேதங்களை நான்காக வகுத்த வியாசமுனிவர் அவ்வேதங்களிலே குறிப்புப் பொருளாகச் சைவநூலுண்மைகளை அமைத்து வைத்தனர். சிறப்புப் பொருளாக சிவமா நெறிக் கொள்கைகளை யெடுத்து விளக்கும் வடமொழி நூல்கள் ஆகமமெனப் பெயர் பெற்றன. தமிழிலே பண்டை நான் மறை முறைகளை உலகிற்கு உணர்த்தக் கருதிய தெய்வப் புலமைத் திருவள்ளுவர் சைவ சித்தாந்தக் கருத்துக்களைப் பொது வகையால் திறம்படத் தமது நூலுள் அறப்பகுதியில் ஓதியருளினர். பின்னர் சைவத்திருநெறித் தலைவராகிய முதல்வர் நால்வரும் தமது கடவுட் பழம் பாடல்களிலே தாம் நுகர்ந்த சைவ சித்தாந்தத் தேனமுதத்தை நிறைத்து உலகிற்கு உதவினர். அவ்வாறே இருமொழி நூற்கடலும் நிலைகண்டுணர்ந்த திருமூலமாமுனிவர் முதலிய பேரறிஞர் தமது அறிவு நூல்கள் வாயிலாக சைவ சித்தாந்த ஒளியைத் திகழச் செய்தனர். அப் பெரியார் காலங் கழிந்தபின் செந்தமிழ் அறிவு நூல்களையும் சிவாகம நூல்களையும் ஆராயும் முயற்சி குறைந்தமையானும் வேத ஞானகாண்ட சாரமாய் வியாசர் செய்த பிரம சூத்திரத்தைப் பொதுப் பிரமாண நூலாகப் பலர் தழுவித் தத்தமக்குத் தோன்றியவாறே பொருள் கொண்டு உலகிற்குப் பெருமயல் விளைத்தனர். ஆதலால் பிரமசூத்திர பாடியங்களாலுண்டாகிய மயக்கத்திற்கு மருந்தில்லாது மன்பதைகள் அலமரு நின்றனர். அப்பொழுது தென்முகத் தெய்வப் பரமாச்சாரியர் திருவருளால் பொல்லாப் பிள்ளையாரிடம் உண்மை நூல் உணர்வினை

முழுதும் பெற்ற ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனார் சைவ நன் மக்களது பெருந்தவக் கொழுந்தா யெழுந்தருளிச் சிவஞான போதம் என்னும் சைவ சித்தாந்தத் தலைமணி நூலைத் தமிழுக்கு உயிரான பன்னிரண்டெழுத் தென்னப் பன்னிரண்டு சூத்திரங்க ளால் திருவாய் மலர்ந்தருளி அதனை ஸ்ரீ அருணந்தி சிவாச் சாரியார் முதலிய தமது மாணவர் நாற்பத்தொன்பதின்மருக் கும் உபதேசித்தருளினர். சிவஞான போதத்தின் வழிநூலாக வெழுந்த சிவஞான சித்தியார், சிவப் பிரகாசம் முதலிய நூல்கள் செய்யுள் வடிவாயிருந்தமையால் பிற்காலத்தார் சைவ சித்தாந்த நூற் பொருளைத் தெள்ளிதின் உணர்ந்திற்றிலர். வடமொழிச் சிவஞான போதத்திற்கு சிவாக்கிர யோகிகள் இயற்றிய உரை பெரிதும் பயனுடைத் தெனினும் சைவ சித்தாந்த நுட்பத்தைச் செவ்வனே விளக்கும் ஆற்றல் மிக்க தன்று. ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியார் செய்தருளிய பௌட்கர விருத்திப் பொதுப் பாகத்தை வடமொழியில் நன்கு விளக்குவ தாகும் எனினும் அது சைவ சித்தாந்த உண்மைகளை முழுவதும் கூறும் நூலன்று. வடமொழிச் சிவஞான போதத் திற்கு வித்தியாரணியர் முதலிய புற மதத்தினர் தத்தமக்குத் தோன்றியவாறே பொருள் கொண்டனர். ஆதலால் சிவஞான போதப் பொருளை அளவை நூன்முறைக் கேற்பவும் இரு மொழி அருள் நூல்முடிவிற் கேற்பவும் விரிவாக விளக்கும் பேருரைப் பெருநூ லொன்று வேண்டியதாயிற்று. அது துறைசை மாதவச் சிவஞான யோகிகளாலே இயற்றியருளப்பெற் றது. வடமொழியிலும் தென்மொழியிலு முள்ள சைவ சித் தாந்த வுண்மைகள் முழுவதையும் இனிது விளக்கிச் சைவ சித் தாந்த நூல்களின் முடிபை உணர்தற்குரிய தெளிவினைக் கற்பார் க்கு நல்கும் கதிர்மணி நூல் இஃதேயாம் என்பது யார்க்கும் விளங்கும். இங்ஙனம் ஒருவாறு சைவ சித்தாந்த வரலாறு கூறி முடித்தாம்.

---

சைவ சித்தாந்த நன்மக்கள் யாவரும் தமது சமய நூல்களைக் குறிக்கொண்டு பாதுகாத்தலைத் தமது பெருங்கடனாக எண்ணக் கடவர். நூல் பாதுகாப்பு ஒன்றினாலே ஆரியர் தமிழரின் மேம்பட்டனர். நூல் பாதுகாவாமையினாலேயே தமிழர் தம் பெருமையை இழந்தனர். தமது சமய நெறி இன்னதென உணர்ந்து அதன்வழி ஒழுகுவதைக் கடைப்பிடித்தலினாலே ஏனையோர் உயர்ந்தனர். அங்ஙனம் செய்யாமையினாலே சைவர் அலைந்து ஒழிந்தனர். அம்மட்டோ! நமக்குப் பெரு வாழ்வும் பெருநிதியுமாகிய திருக்கோயில், திருமடம் முதலிய சைவ சமய நிலையங்களைப் புறச் சமயத்தார் பறிகொள்ள விடுத்து வாளாயிருக்க நேர்ந்தது. சைவ சித்தாந்த நூல்களை இனியாவது நாம் கைநழுவ விடாது போற்றிப் புரப்போமாக. சைவ சித்தாந்தத்தின் சார்பாய நூல்களனைத்தையும் தமிழிலே அச்சிடுவித்துப் பயன் கொள்ளுதலும் நமது கடமையே. ஆங்கிலத்திலே Science என்கிற பூதநுண்ணூல், புலநுண்ணூல்கள் போல் நுண்ணூல்கள் யாவும் சைவ சித்தாந்தத்திற்குச் சார்பாக இருப்பின் அவற்றை நாம் கொள்ளவேண்டும். வடமொழி தென்மொழிகளிலுள்ள சரியை, கிரியா யோகநூல்கள் யாவும் சைவசித்தாந்த சார்பினவாதலால் அவற்றையும் தமிழிலே யாருமறிய அச்சிடல்வேண்டும். எளிதாக யாவர்க்கும் விளங்கும் வண்ணம் சித்தாந்தக் கொள்கையினைப் பரப்புதற்குச் சிறு நூல்கள் வெளிவரல் வேண்டும். திருவாசகம், சிவஞான போதம் என்னும் இரண்டு நூல்களையும் சொற் பொருளாதல் விளங்கும்படி அச்சிடுவித்து யாவர்க்கும் குறைந்த விலைக்குக் கொடுக்கவேண்டும். சைவ மாணவர் யாவரும் சைவ சித்தாந்த வுண்மைகளைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் உணரும் வண்ணம் போதகர்கள் நியமித்து அவற்றைக் கற்பிக்கவேண்டும். கிறித்தவர்கள் தங்கள் நூலைக் கற்றுப் பாதுகாத்துப் பிறர்க்கு ஈதல் போன்று சைவர் ஒவ்வொருவரும் சைவ நூல்களைக் கற்றுப் பாதுகாத்துப் பிறர்க்குப் பயன்படச் சொல்லல்வேண்டும். இன்றேல் சைவரென்னும் பெயர்க்குப் புறம்பேயாவர். குடதிசைக் கிறித்தவக் குருக்களாகிய Dr. G. U. Pope, Dr. Gondie முதலியவர்கள் திரு

வாசகம், சிவஞான போதம் முதலிய நூல்களைக் கற்றுச் சீராட்டிப் பாராட்டி நிற்கவும், நம்மவர்கள் தங்கள் பெருநிதி யிழந்து புறச்சமயிகள்முன் திகைத்து நிற்பது எத்துணை யிரங்கத் தக்கதாகின்றது. இந்நாட்டிலே பொருளாளரும், துறவிகளும் சைவ சித்தாந்தம் இன்னதென் றுணராது கொன்னே வாழ்நாட் கழிக்காநிற்ப, சுமார்த்தரும் வைணவரும் தமது மொழியினையும் தமது சமய நூலினையும் அரசாங்கத்தாரும் சர்வகலா சங்கத்தாரும் மதித்துப் பேருதவி செய்யும் வண்ணம் முயன்று வெற்றி பெற்றிருக்கின்றார்கள். அம்மட்டோ! நமது சமய வளர்ச்சிக்காகவும் தமிழ் வளர்ச்சிக்காகவும் கோயில்களிலும் மடாலயங்களிலும் வைத்த பெருநிதிக் குவியல்களெல்லாம் தஞ் சமய வளர்ச்சிக்கும் தம் மேம்பாட்டிற்குமே உரிமையாக்கிக் கொண்டார்கள். சர்வகலா சங்கத்தார் வடமொழி வேதாந்த நூல் வல்லார்க்குச் சிரோன்மணிப் பட்டம் கொடுப்பதாக ஏற்படுத்தி யிருப்பதுபோல் சித்தாந்தப் புலமைப் பட்டங்கள் அமைக்கவேண்டுமென்று நாம் அறிவிக்க வேண்டும்.

ஆதலால் சைவ சித்தாந்திகள் தமது அரிய நூல்களையும் சமயத்திற்கு உயிராகிய நிலையங்களையும் ஊக்கந் தளராது பாதுகாக்க முயல்வதுடன் தமது ஒப்பற்ற சமயம் எங்கும் பரவுதற்குரிய முயற்சிகள் யாவும் செய்து வெற்றி பெறும் வண்ணம் விடா முயற்சியையும் தளராத ஊக்கத்தையும் நிலைத்த பேரன்பையும் சிவபெருமான் பெருங் கருணையால் ஈந்தருளும் வண்ணம் திருவருளைப் போற்றுவோமாக.

கா. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள்
அட்வகேட், எம். ஏ., எம். எல்.

---

# காழித்தேவாரச் சிறப்பு

(௯௯-ம் பக்கத்தொடர்ச்சி)

வைஷ்ணவ சமயத்தார் பத்துப் பாசுரத்தை மொழி என்றும் பத்துப்பத்தை பத்து என்றும் முதலாகு பெயராய்க் கூறுவர். திருப்பதிகத்தின் ஒவ்வொரு திருப்பாடலும், ஒவ்வொரு பதிகத்தின் கருத்தைக் கொண்டிருத்தலால், பரவொன்றைப் பதிகம் என்று வழங்கும் என்பதும் ஓர் சைவசம்பிரதாயம் உண்டு. பா என்பது சினையாகு பெயராய்ப் பதிகத்தை உணர்த்தும் என்பர் சில பெரியார். திருமுறைகண்டபுராணம் (கச, கரு, கசு).

'சேடர்மலி காழிநகர் வேந்தர்தாமுந்
தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார்பங்கிற்
பீடுடைய வுமைமுலைப்பா லருளாலுண்டு
பிஞ்ஞகனைச் சினவிடைமேற் பெருகக்கண்டு
தோடுடைய செவியன்முதற் கல்லூரென்னுந்
தொடைமுடிவாப் பரசமயத் தொகைகண்மாளப்
பாடினார் பதிகங்கள் பாவிலொன்றும்
பதினாறுயிர முளதாப் பகருமன்றே'

'திருநாவுக் கரையரெனுஞ் செம்மையாளர்
தீயமணர் சிறைநீங்க வதிகைமேவும்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச்சூலை
கொடுங்கூற் றாயினவென்ன வெடுத்துக்கோதி
லொருமானைத் தரிக்குமொரு வரையுங்காறு
மொருநாற்பத் தொன்பதினா யிரமதாகப்
பெருநாமப் புகலூரிற் பதிகங்கூறிப்
பிஞ்ஞகனா ரடியிணைகள் பெற்றுளாரே'

பின்புசில நாளின்க ணாரூர்நம்பி
பிறங்குதிரு வெண்ணெய்நல்லூர்ப் பித்தாவென்னு
மின்பமுதற் றிருப்பதிக மூழிதோறு
மீறாய்முப் பத்தெண்ணா யிரமதாக

முன்புபுகன் றவர்நெடித்தான் மலையிற்சேர்ந்தார்
முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர்தன்னி
லன்றவர்கை யிலச்சினையால் வைத்தார்மன்ன
வாராய்ந்து தருகவென வருளிச்செய்தார்'

என்ற திருவிருத்தங்களை நோக்கிச் சம்பந்தர் 'தோடுடைய செவியன்' முதல் 'கல்லூர்' என்னுந்தொடை முடிவாகப் பாடியவை 16000ம், அப்பர் 'கூற்றாயின' முதல் 'ஒருவரையும்' காறும் 49000ம், சுந்தரர் 'பித்தா' முதல் 'ஊழிதோறும்' ஈறாய் 38000 திருப்பாடல் அருளிச்செய்தார் என்பதும் ஒருசார் போதரும். நாயனார்கள் காலத்தின்பின் உத்தமசோழராலயங்களிற் பாடுவித்த சில திருப்பாடல்கள் தவிர ஏனையவை வழங்காமற்போயின; அக்குறையை நீக்க, ராஜராஜதேவர் திருநாரையூர்ப்பிள்ளை அநுக்கிரகத்தால் நம்பிகளைக்கொண்டு சில பகுதியை வெளிப்படுத்தினர். அவைதாம், சிவபெருமான் சித்தப்படி நமக்கு ஈண்டு வேண்டுவன. அவற்றை நம்பிகள் ஏழு திருமுறைகளாக வகுத்தார். அவர் வகுத்தவாறு திருமுறைகளில் கண்ட பதிகங்கள் (திருமுறைகண்டபுராணம் 25)

'பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்
றெண்பத்தி னன்கினு விலங்குதிரு முறைமூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினல்
வண்பெற்ற முறையொன்று நூற்றினல் வன்றொண்டர்.'

| | |
|---|---|
| சம்பந்தர் | 384 |
| அப்பர் | 307 |
| சுந்தரர் | 100 |
| ஆக | 791. |

இக்காலத்துத் தேவாரப் பதிப்பாசிரியர் சிலர், பதிகங்கள் 795, 796, 797 என்றும், நம்பியாண்டாருக்குப் பின்னும் சில பதிகங்கள் மறைய, வெள்ளியார் சிலவற்றைச் சேர்த்தார் என்றும் கூறுவார்.

ராஜராஜ தேவர்க்குப்பின் குலோத்துங்க சோழதேவர் பன்னிரு திருமுறைகளை வகுப்பித்தார். அவைதாம் நமக்குத் திருமந்திரங்கள் கஉ.

இவ்வித்தகப்பாடல் மூவரும் தேவாரப்பதிகங்களைத் தலங்கள் தோறுஞ் சென்று, சிவபெருமானைத் துதித்து நம்மைக் கரையேற்றும்வண்ணம் பாடியருளினார்கள். அவ்வாறு அவர்கள் பாடி அருளிய ஸ்தலங்கள் பலநூறு. இம்மூவரும் பாடியவற்றில் எஞ்சியுள்ள பதிகங்கள் பெற்ற ஸ்தலங்கள் உஎ௰. இவற்றை, நாம் பாடல்பெற்ற ஸ்தலங்கள் என்கிறோம். இப்பதிகங்களில் குறிப்பாகவும், அமிசமாகவும், சில ஸ்தலங்கள் கூறப்பட்டன. அவை உசகூக்கு மேலாகும். இவற்றை வைப்புத் தலங்களென்றும், அம்ச க்ஷேத்திரங்கள் என்றும் கூறுகின்றோம். பாடல் பெற்ற ஸ்தலங்களில் சோழநாட்டிலே காவிரிக்கு வடகரையில் உள்ள ஸ்தலங்கள் 63, காவிரிக்குத் தென்கரையில் உள்ள ஸ்தலங்கள் 127, ஈழநாட்டிலுள்ள ஸ்தலங்கள் 2, பாண்டியநாட்டிலுள்ள ஸ்தலங்கள் 14, மலைநாட்டிலுள்ள ஸ்தலம் 1, கொங்கநாட்டிலுள்ள ஸ்தலங்கள் 7, நடுநாட்டிலுள்ள ஸ்தலங்கள் 22, தொண்டைநாட்டிலுள்ள ஸ்தலங்கள் 32, துளுவநாட்டிலுள்ள ஸ்தலம் 1, வடநாட்டிலுள்ள ஸ்தலங்கள் 5. இவைகளுள் சோழநாட்டில் முதலாவது ஸ்தலமாகிய திருக்கோயிலுக்குத் திருப்புலியூர் சிதம்பரம் முதற் பல நாமங்கள் உள. இத்தில்லைவனத்தில் சிவகாமவல்லித் தாயார் வாமபாகத்து நின்று திருநோக்குற்று மகிழவும், இந்திராதி தேவர்களும் பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலிய இருடிகளுங் கண்டு பேரானந்தமடைந்துய்யவும், சிவபெருமான் பஞ்சகிருத்திய ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளியது. சிவகலைகளனைத்தும் அர்த்தயாமத்தில் வந்து ஒடுங்குவது. திருப்புலீச்சரதீர்த்த முதலிய பல தீர்த்தங்களாற் சிறந்து, துன்மதன் துச்சகன் துற்றரிசனன் முதலிய அநேகர் முத்தி பெற்றது. உபமந்யுமஹாமுனிவர் திருப்பாற்கடல் அருளப் பெற்றது. திருவுடைத் தில்லைவாழந்தணர் மூவாயிரவரும் வியாசரும் சுகரும் சௌனகரும் சூதரும் பூசித்தது. ஜைமினி முனி

வர் மூன்றடி தம் கவியாகவும் ஈற்றடி வேதமாயுமுள்ள வேத பாதஸ்தவஞ் சொல்லித் தோத்தரித்தது. திருநீலகண்டர், திருநாளைப்போவார், கூற்றுவர், கோச்செங்கட் சோழர், கணம்புல்லர், ஐயடிகள், காடவர்கோன், சேந்தனர், திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி, காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனர், புருடோத்தமநம்பி, சேதிராயர் இவர்கள் திருவிசைப்பாவும், சேந்தனர் திருப்பல்லாண்டும் பாடியது. மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தையும், திருக்கோவையும் பாடி எழுதுவித்தது. சந்தானசாரியர்களில் மறைஞானசம்பந்த சிவாசாரியரும், உமாபதி சிவாசாரியரும் வீற்றிருக்கப்பெற்றது. திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர் திருக்களிற்றுப்படியாரைத் திருவடியில் வைத்தருளப்பெற்றது. இன்னும் பல பெருமைகள் பலவாறு பல புராணங்களிலும் விதந்து ஓதப்பெற்றது. இத்தலத்தில் சமயாசாரியர் மூவரும் ஓதியருளிய திருப்பதிகங்கள் கக.

திருப்பதிகம்பெற்ற இவற்றுள் சோழவளநாட்டில் கச-வது ஸ்தலம் காழி; உஎ-வது ஸ்தலம் மேலைக்காழி தலைஞாயிறு என்னும் திருக்கருப்பறியலூர். கோல்வளை நாயகியாரோடும் எம் குற்றம் பொறுத்த நாதர் எமது நெஞ்சக மாகிய கொகுடி ராஜகிருகத்தைக் கோயிலாகக் கொண்டமர்ந்தருளுவது. மூர்த்தி தலம் தீர்த்தங்கள் முறையாகச் சிறந்து விளங்குவது. இத்தலம் 'மருக்கொள் முல்லைகள் சேர்தலா லூதிகா வனமாய்க், கருக்கொள் பாதகந் தீர்த்தலாற் கன்மநா சப்பேர், அருக்க னர்ச்சனை செய்தலா லாதித்த புரியு, ளிருக்கு ஞானமீ தலிற்கருப் பறியலூ ரெனலாம்', 'பிரளயத்தினு நிலைவலாற் பெய்வளை யுமைக்கு, வரதனல்லரு ளுரைத்தலா விரத்தின மலைமேல், விரவு கஞ்சுகி நாதன்வீற்றிருத்தலால் விண்ணோர், பரவு காழியின் மேற்கதாற் பச்சிமக் காழி' ஞானநாயகியாருக்குச் சகலாகமப்பொருளை உபதேசித்தருளிய ஞானதேசிகோத்தமராகிய இத்தல மூர்த்தியை 'ஆனை மாமுகன் அறுமுகன் அம்பிகை அயன்மால், ஏனை ருத்திரர் வசுக்கள் ஆதவர்திசை யெண்மர், மீனை யார்கொடி

வேளெழு முனிவர்மெய்க்கிரகர், தேனைமேவலரால் அருச்சனைசெய்து சிறந்தார்.' இங்குக் குறித்த முனிவரர் அன்றியும் இராவணன் ஹநுமான் விசித்திராங்கதன் முதலியோர் பூசித்துப் பேறுபெற்றார்கள். மேலும் ஓர்கால் இந்திரன் செருக்கோடு திருக்கைலைக்குச் சென்று, பூதவடிவத்தோடு தன்னை யெதிர்த்த சிவபரஞ் சுடரை யுணராது குலிசாயுதத்தால் தாக்கி, அப்பரஞ் சுடரின் சீற்றங்கண்டு வேண்ட, அச்சீற்றஞ் சலந்தரனுயபின் அவ்விந்திரனும் தேவர்களும் வணங்கிச் சீர்பெற்றார்கள். இத்தகைய விசேஷங்கள் வாய்ந்த இச்சிவஸ்தலத்தைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனுரும் சுந்தரமூர்த்திநாயனுரும் ஒவ்வொரு திருப்பதிகம் பாடியுள்ளார்கள். அவர்கள் அவற்றைப் பாடிய அமயம் இவையென அருண்மொழித்தேவர் தமது அரியபெரிய புராணத்தில் உரியபடி கூறியுள்ளார். இவற்றுள் ஆளுடைய பிள்ளையார் 'பலந்தரு தமிழ்க்கிளவி பத்துமிவை கற்று, வலந்தரு மவர்க்குவினை வாடலெளி தாமே', எக்காரணத்தாலெனின், அப்பாசுரங்களாற் சுட்டி யுணர்த்தப்பட்ட ஆதித்தபுரேசன் 'சுற்றமொடுபற்றவை துயக்கற வறுத்துக், குற்றமில் குணங்களோடு கூடுமடியார்கண், மற்றவரைவானவர்தம் வானுலகமேற்றக், கற்றவன்' ஆதலின். ஆளுடையநம்பிகள் திருவாய்மலர்ந்தருளிய 'விருந்தாயசொன்மாலை கொண்டேத்திவினைபோக வேலிதோறுங், கருந்தாள வாழைமேற் செங்கனிகள் தேன் சொரியுங் கருப்பறியலூர்க், குருந்தாய முள்ளெயிற்றுக் கோல் வளையா ளவளோடுங் கொகுடிக் கோயில், இருந்தானைமனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினியவாறே.' அத்திருவாரூர் நம்பிகள் உரைத்த வண்டமிழ் கற்றோர்தம் இடர்தீர்க்கும். இத்தலத்தில் 'பாரினில் விளங்கும் விநாயக தீர்த்தம் பரவிய சூரியதீர்த்தஞ், சீரிய வசிட்டதீர்த்தமே யநுமதீர்த்தமாம் நிம்பபுட்கரணி, யேரிலங் கருள்சேர் சங்கபுட்கரணியினிய பொற்றாமரைத்தடமே, நேரில்செங்கழுநீர்த் தடமெனத்தீர்த்த நிலவுமோரெட்டென நிகழும்.' இத்தடாக தீர்த்தங்களில் விதிப்படி நீராடில் அவர் 'செவ்விய போகங்களெலாஞ் சிந்தைகளிப்புட னருந்தி, வெவ்விய தீவினைத்தொகையை வீட்டியருள்

விழிகாட்ட, நவ்விவிழிக் கோல்வளையாளுபகன் சேவடிபுகுவார்.' கச-வது ஸ்தலமாகிய சீகாழிக்குப் பன்னிரண்டு பெயர் உண்டு:—அவைகள் கழுமலம், காழி, கொச்சைவயம், சண்பை, சிரபுரம், தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய் வெங்குரு, வேணுபுரம் என்பவைகள்.

இப்பன்னிருநாமப்பதியின்மேல், இவ்வித்தகப்பாடல் மூவரும் பலபதிகங்கள் பாடி இருக்கின்றார்கள். அப்பதிகங்களின் அட்டவணை வருமாறு:—

| திருமுறை. | பண். | பதிகத்தின் முதற் குறிப்பு. | | பதிகம். | திருப் பாடற்றொகை. |
|---|---|---|---|---|---|
| | | **க. பிரமபுரம்.** | | | |
| க | நட்டபாடை | தோடுடைய | | க | கக |
| உ | சீகாமரம் | எம்பிரானெ | | க | கக |
| ,, | காந்தாரம் | கறையணி | | க | கக |
| ங | கொல்லி | கரமுனம் | | க | க0 |
| ,, | பஞ்சமம் | இறையவனீ | | க | கக |
| | | | ஆக | ரு | ருச |
| | | **உ. வேணுபுரம்.** | | | |
| க | நட்டபாடை | வண்டார்குழல் | சு | க | க0 |
| உ | இந்தளம் | நிலவும் | | க | க0 |
| ,, | காந்தாரம் | பூதத்தின் | க0 | க | கக |
| | | **ங. புகலி.** | ஆக | ங | ஙக |
| க | தக்கராகம் | விதியாய் | | க | கக |
| ,, | வியாழக்குறிஞ்சி | ஆடலரவம் | | க | கக |
| ,, | இந்தளம் | உகலியாழ் | | க | கக |
| ,, | திருவிராகம் இந்தளம் | முன்னிய | | க | கக |
| உ | காந்தாரம் | உருவார்ந்த | | க | கக |
| ,, | செவ்வழி | விடையதேறி | சு | க | க0 |

| திருமுறை. | பண். | பதிகத்தின் முதற் குறிப்பு. | | பதிகம். | திருப்பாடற்றொகை. |
|---|---|---|---|---|---|
| ங | நாலடிமேல்வைப்பு, காந்தார பஞ்சமம் | இயலிசை | | க | கக |
| ,, | காந்தாரபஞ்சமம் | கண்ணுதலானும் | | க | கக |
| க | திருப்புகலியும்திருவீழிமிழலையும், வினவுரை (நட்டபாடை) | மைம்மரு | | க | கக |
| | | | ஆக | சா | சாஅ |

ச. திருவெங்குரு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | குறிஞ்சி | காலைநன் | | க | கக |
| ங | திருமுக்கால், சாதாரி | விண்ணவர் | க0 | க | க0 |
| | | | ஆக | உ | உக |

ரு. திருத்தோணிபுரம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | பழந்தக்கராகம் | வண்டரங்க | | க | கக |
| ங | திருவிராகம், சாதாரி | சங்கமரு | | க | கக |
| ,, | பழம்பஞ்சுரம் | கரும்பமர் | ங,ச,ரு,சா | க | எ |
| | | | ஆக | ங | உசா |

சா. திருப்பூந்தராய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | இந்தளம் | செங்நெலங் | சா | க | க0 |
| ங | காந்தாரபஞ்சமம், | பந்துசேர் | | க | கக |
| ,, | ஈரடிமேல்வைப்பு, காந்தாரபஞ்சமம் | தக்கன்வேள்வி | | க | கக |
| ,, | காந்தாரபஞ்சமம் | மின்னன | | க | கக |
| | | | ஆக | ச | சங |

எ. திருச்சிரபுரம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | பழந்தக்கராகம் | பல்லடைந்த | | க | கக |
| ,, | வியாழக்குறிஞ்சி | வாருறு | | க | கக |
| உ | நட்டராகம் | அன்ன | | க | கக |
| | | | ஆக | ங | ஙங |

| திருமுறை. | பண். | பதிகத்தின் முதற் குறிப்பு. | பதிகம் | திருப்பாடற்றொகை. |
|---|---|---|---|---|

௮. திருப்புறவம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ௧ | தக்கேசி | நறவநிறை | ௧ | ௧௧ |
| ,, | குறிஞ்சி | எய்யாவென் | ௧ | ௧௧ |
| ௩ | திருவிராகம், சாதாரி | பெண்ணிய | ௧ | ௧௧ |
| | | ஆக | ௩ | ௩௩ |

௯. திருச்சண்பைநகர்.

| | | | | |
|---|---|---|---|---|
| ௧ | தக்கேசி | பங்கமேறு ௬ | ௧ | ௰ |
| ௩ | திருவிராகம், சாதாரி | எந்தமது | ௧ | ௧௧ |
| | | ஆக | ௨ | ௨௧ |

௰. சீகாழி.

| | | | | |
|---|---|---|---|---|
| ௧ | தக்கராகம் | பூவார்கொன்றை | ௧ | ௧௧ |
| ,, | ஷை | அடலேறு | ௧ | ௧௧ |
| ,, | குறிஞ்சி | நல்லார் ௩,௪,௫,௬ | ௧ | ௭ |
| ,, | ஷை | உரவார் ௬ | ௧ | ௰ |
| ௨ | இந்தளம் | நல்லானை ௯ | ௧ | ௰ |
| ,, | சீகாமரம் | பண்ணிநேர் | ௧ | ௧௧ |
| ,, | காந்தாரம் | நலங்கொள் | ௧ | ௧௧ |
| ,, | ஷை | விண்ணியங்கு | ௧ | ௧௧ |
| ,, | பியந்தைக்காந்தாரம் | பொங்குவெண் | ௧ | ௧௧ |
| | | (௧௧-வதுபாட்டில் 3அடி இல்லை.) | | |
| ,, | நட்டராகம் | நம்பொருள் | ௧ | ௰ |
| ,, | செவ்வழி | பொடியிலங்கு | ௧ | ௧௧ |
| ௩ | திருமாலைமாற்று, செவ்வழி | யாமாமாநீ | ௧ | ௧௧ |
| ,, | கௌசிகம் | சந்தமார் | ௧ | ௧௧ |
| | | ஆக | ௧௩ | ௧௩௬ |

| திருமுறை. | பண். | பதிகத்தின் முதற் குறிப்பு. | | பதிகம் | திருப் பாடற் றொகை. |
|---|---|---|---|---|---|
| | **கக. கொச்சைவயம்** | | | | |
| உ | பியந்தைக்காந்தாரம் | நீலநன் | சா | க | க0 |
| ,, | ஷை | அறையும் | சா | க் | கக |
| ங | சாதாரி | திருந்துமர் | | க | கக |
| | | | ஆக | ங | ஙக |
| | **கஉ. திருக்கழுமலம்.** | | | | |
| க | திருவிராகம் நட்ட பாடை | பிறையணி | | கக | க |
| ,, | குறிஞ்சி | அயலூறு | | க | கக |
| ,, | திருத்தாளச்சதி, | | | | |
| ,, | வியாழக்குறிஞ்சி | பந்தத்தால் | | க | கக |
| ,, | மேகராகக்குறிஞ்சி | சேவுயரும் | | க | கக |
| ங | கொல்லி | மண்ணினல் | | க | கக |
| ,, | புறநீர்மை | மடன்மலி | | க | கக |
| | | | ஆக | சா | சாசா |
| | **பல்பெயர்ப்பத்து** | | | | |
| க | தக்கேசி | எரியார் | | க | கஉ |
| ,, | திருவிருக்குறள் குறிஞ்சி | அரனை | | க | கஉ |
| ,, | மொழிமாற்று, வியாழக்குறிஞ்சி | காடதணி | | க | கஉ |
| ,, | ஏகபாதம், வியாழக் குறிஞ்சி | பிரமபுரத்துறை | | க | கஉ |
| ,, | திருவெழுக்கூற்றிருக்கை | ஓருருவாயினை | | க | க |
| ,, | திருச்சக்கரமாற்று காந்தாரம் | பிரமனூர் | | க | கஉ |
| உ | கோமுத்திரி, காந்தாரம் | பூமகனூர் | | க | கஉ |

| திருமுறை. | பண். | பதிகத்தின் முதற் குறிப்பு. | பதிகம் | திருப் பாடற் றொகை. |
|---|---|---|---|---|
| ,, | காந்தாரம் | விளங்கிய | ௧ | ௧௨ |
| ௨ | வழிமொழித்திருவிராகம் காந்தாரம் | சுரருலகு | ௧ | ௧௨ |
| ௩ | ஈரடி, காந்தாரம் | வரமதே | ௧ | ௧௨ |
| ,, | திருவியமகம், காந்தாரம் | உற்றுமை | ௧ | ௧௨ |
| | | ஆக | ௧௧ | ௧௨௧ |

திருஞான சம்பந்தர் திருப்பதிகம் ௬௭ க்குத் திருப்பாடல் ௬௯௫

திருநாவுக் கரையர்

தோணிபுரம்

| | | | | |
|---|---|---|---|---|
| ௫ | திருக்குறுந்தொகை | மாதியல் | ௧ | ௧௰ |
| ௬ | திருவிருத்தம் | பார்கொண்டு | ௧ | ௧௰ |
| " | ஷ | படையார் | ௧ | ௧ |

சுந்தரர்

கழுமலம்

| | | | | |
|---|---|---|---|---|
| ௭ | தக்கேசி | சாதலும் | ௧ | ௧௰ |

ஆக மூவர் திருப்பதிகம் ௭௧-க்குத் திருப்பாடல் ௭௨௯

இத்திருப்பதிகங்களை மூவரும் எவ்வெச் சமயங்களில் திருவாய் மலர்ந்தருளினர்? தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தில் இச்சமயங்களை நன்றாக விளக்குகின்றார். அவற்றை இவ்வட்டவணையிற் காண்க.

(தொடரும்)

P. A. முத்துத்தாண்டவராய பிள்ளை,

சீகாழி.

# நூலாராய்ச்சி

## வேதம் மறை அங்கம் ஆகமம்.

I

க. ஓதிய ஞானமு ஞானப் பொருளு மொலிசிறந்த
வேதியர் வேதமும் வேள்வியு மாவன (திருநாவுக்கரசு)

உ. விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள் (ஷை)

ங. வேதங்கள் வேறு வேறு தெரித்தவன் (ஞானசம்பந்தர்)

II

க. முத்தமிழும் நான் மறை யுமானான் கண்டாய் (அப்பர்)

உ. சோற்பிரி விலாத மறை பாடி நடமாடுவர் (ஞானசம்பந்தர்)

ங. பண்போலி நான் மறை யாடி யாடி (ஷை)

ச. ஆய்ந்த நான் மறை (ஷை)

ரு. திமில நான் மறை (மணிவாசகர்)

III

க. ஆலின் கீழிருந்து நால்வர்க்கறம் பொருள் வீடின்ப
மாறங்கம் வேதம் தெரித்தானை (திருநாவுக்கரசு)

உ. நான் மறை யோடா றங்க மாயினான் காண் (ஷை)

ங. அன்றாலின் கீழ்த் திருந்து மறைப்பொரு
ணால்வர்க் கருள்செய்தானை (ஷை)

ச. சொன்மலிந்த மறைநான் காறங்க மாகி (ஷை)

ரு. மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன வாகமந் தோற்று வித்தருளியும் (மணிவாசகர்)

சு. கேவேட ராகிக் கெளிறது படுத்தும்
ஆவேட் டாகிய வாகமம் வாங்கியும்

மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்ற வைம்முகங்க ளாற்பணித் தருளியும் (மணிவாசகர்)

௭. இத்தி தன்னின் கீழிரு மூவர்க்கு
அத்திக் கருளிய வரசே போற்றி (ஷை)

௮. நன்றாக நால்வர்க்கு நான்மறையி னுட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் (ஷை)

௯. அருந்தவருக் காலின்கீ ழறமுதலா நான்கனையும்
இருந்தவருக் கருளுமது வெனக்கறிய வியம்பேடி
அருந்தவருக் கறமுதனான் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ (ஷை)

௰. சைவ வேடந் தானினைத் தைம்புலனும்
அழிந்த சிந்தை யந்தணாளர்க் கறம்பொரு ளின்பம் வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி (ஞானசம்பந்தர்)

IV

௧. அங்கமா யாதியாய் வேத மாகி
அருமறையோ டைம்பூதந் தானே யாகி (திருநாவுக்கரசு)

௨. மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி (ஷை)

௩. பலவேதம் அங்கமாறு மறைநான் கவையுமானார் (ஷை)

இந் நான்கு வகுப்பில் தரப்பட்ட தேவார திருவாசகப் பாவடிகளை யுற்றுணர்வார்கட்கு சிற்சில வுண்மைகள் புலப்படலாம். வேதம், மறை ஒரு பொருட்கிளவிகளாய் மாற்றுப் பெயர்களாய் வழங்கப்பட்டிருத்தல் காணப்படுவதன்றி நான்காம்பாகு பாட்டில் இரண்டு மொழியும் வெவ்வேறு நூல்களைக் குறிப்பதை யூகிக்கலாம். அன்றியும், வேதம், மறை, அங்கம், ஆகமம் இவை ஆலின்கீழ்ப் பெயரிலா நான்கு முனிவர்கட்கு சிவபெருமானால் அருளப் பட்டன வென்பதும் போதரும். இவை அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களை வேறு வேறான நான்கு முனிவர்கட்கும், அங்கமாறினை (இருமூ) ஆறுமுனிவர்

கட்கும் எம்பெருமான் அளித்தனர் என்பதும் விளங்கும். இத்தி எனப்படுவது கல்லால். மகேந்திரமென்ற மலை குமரிப் பாக்கத்திலுளது. இப்பெயர் தாங்கிய மலை கஞ்சம் ஜில்லாவிலும் இந்தியாவின் வடமேற்கிலு முள்ளதென்பர் சிலர். வேதம் ஒலி சிறந்தது, வேதியர்க்குரிய தென்பதும்; மறை பண்சிறந்தது, பொருள் மலிந்த தென்பதும் தெற்றெனத் தெளிய வரும். தேவார திருவாசக காலம் தமிழ்மக்கள் புத்தமுதலிய புல்லறி விற் பல சமயம் தத்தமதங்களில் தட்டுளுப்புப்பட்டு நின்ற காலம். அக்காலத்தில் ஆரியருந் தமிழரும் ஐக்கியப்பட்டு புற மதத்தின ரொருவாத நிகழ்த்தினரென்று சரித்திரவலாறு கூறும். ஆயினும் ஆரியர் வேள்விச் சடங்குகளைப் பெரிதாக மதித்தொழுகியவர். தமிழ்மக்கள் உண்மைப்பொருளை மிகக் கருதி மாசற்ற மன வொழுக்கங்களைக் கைப்பற்றியவர். தமிழ் மக்கள் நாகரிகராய், நிறைமொழியுடையரா யிருந்தமைபற்றி தென்றிசைக்கேகு முன் அகத்தியர் சிவபெருமானிடந் தமிழ் கற்றுவந்தனரென்பது புராணவரலாறு. இதுநிற்க.

ரிக் முதலிய ஆரியவேதங்கள் தெய்வங்கள் முப்பத்து மூவரைத் துதித்தும் வேறுவேறு முனிவர்களால் வேறு வேறி டங்களில் வேறு வேறுகாலங்களில் அமைக்கப்பட்டும், முதற் கண் மூன்று (திரேயி) யிருந்து வியாசரால் நான்காகப் பிரிக்கப் பட்டனவென்றும் வடமொழிவரலாறு கூறும். வேதமாயினும், அங்கமாயினும், ஆகமமாயினும் சிவபெருமானால் நாலாறு முனிவர்கட்கருளப்பட்டதென்று அவ் வரலாற்றில் காணப்பட வில்லை. அன்றியும், நான்கு புருஷார்த்தங்களையும் நான்கு வேதங்கள் விரிக்கின்றனவென்று ஆரிய வரலாறு தெரிப்ப தில்லை. முழுமுதற் கடவுள் பசுபதி என்ற தத்துவவுண்மைப் பொருளை ரிக் வேதமெங்கணுந் துருவினாலுங் காண்பதற்கில்லை. ஆனால் தமிழ்மறை, தமிழாகமம், தமிழ்மறையங்கம் இவை சிவ பெருமானால் கல்லாலமரத்தின் கீழ் நாலாறு முனிவர்கட்கு அறம் பொருளின்ப வீடும், முடிவினைக் கைப்படுத்தத் தக்கவழி வாய்க்கால்களும் அருளப்பட்டன என்பதும், மறைவான இரகசி

யப் பொருளை விரித்துக்கூறிய தமிழ்நான்மறை முதலூழியிலோ இரண்டாவதூழியிலோ தமிழகம் பௌவத்தால் வௌவப்பட்ட தருணத்தில் மறைந்து போயிற்றென்றும், இம்மறைப்பொருளை யுட்கொண்டு பின்காலத்தில் வேதங்கள் வெளித்தோன்றின வென்றும் மொழிவதற்கு மேற்காட்டிய நான்காம்பகுதியிலுள்ள பாவடிகள் இடந்தருகின்றன. தமிழ்மொழி பூர்வமொழி, மறை மொழி, நிறைமொழி என்பதை ஐயமுறுவாரியார். ரிக் வேதம் ஆக்கப்பெற்றகாலம் உயர்ந்தது நாலாயிரமாண்டுகட்கு முன்னரென்பர்.

இவற்றினுண்மையை ஆரியந்தமிழ்மொழிகளின் கலைகளைக் கண்ட சரித்திரவாராய்ச்சி வல்லுநர் ஓரம் பேசாது எம்மொழியும் எம்மக்களுக்கும் பொதுமொழியென்று கருதுபவராதலின் அன்னார் ஆய்ந்துதர விரும்புவன்.

தமிழகமே எம்மக்கட்கும் எம்மொழிக்குந் தாயகமென்று கூறும் பெரியாருடன் எனக்கு வாதமில்லை. தமிழகத்தினர் மறை யாறங்க வாகமங்களை கைக்கொண்டு வடதிசைநோக்கிப் புறப்பட்டு, கீழ்க்கரையோரமாக கஞ்சம்வழிபோய் கைலைமலை யடைந்து மேற்கும் கிழக்குமாகப் பண்ணடுகட்குஞ் சென்று கல்வி, கேள்வி, நாகரிகங்களைப் பரப்பினர் என்பாருளர். தமிழ் மக்களிற் சிலர் தவசீலராய் தேசிகர், ஆதி சைவரென மகுடந் தாங்கி வருதலும், தென்னாட்டிலுள்ள பார்ப்பனமக்கள் சைவ வொழுக்கம் பற்றியிருப்பதும், வடதிசை மேற்றிசையி லுள்ள வர் இடம்பற்றி சைவவொழுக்கந் தவறி கொலை புலைக்கு ஆளாகி யிருப்பதும் இயற்கை யென்பது யாமறியக் கிடக்கும். இஃதல்லாமல், தமிழும் ஆரியமும் வேறல்ல, ஆரியம் தமிழ்ப் பெரியாரா லாக்கப்பெற்ற குழூவுக்குறிமொழி. எஸ்பெரான்ரோ போன்ற மொழி, சிறுவர்கள் சிறுமிகள் பேசும் பத்தொன்பதாவது மொழி போன்றது. இன்றுந் தமிழ்த்தத்துவப் புலமை வாய்ந்தோர் தத்துவ நூல்களை தமிழி லக்கத்தால் குறுகிய இடத்தில் எழுதி மனனப்படுத்தி வருவதற்கு வரைந்தாக்கிய ஒரு மொழி என்றுங் கூறுவார் ஒரு சாரார். இதுவுமன்றி தமிழ்

மக்களே முன்னிலர், அனைவரும் ஆரியமக்களே என்று நெஞ்சு துணிந்து புகல்வாருமுளர். இவர் கூற்றுண்மையாயின் இவர் மீது என்னன்பு இடையறாது நிற்கும். வடமொழி, தென் மொழி, இவற்றின் தொன்மை, தகைமையைப் பற்றிய போரு மொழியும். தமிழகத்திலுள்ள எவ்வகை மக்களும் ஐக்கியப் பட்டுப் பொறுமைபூண்டு 'இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை,' 'யாமார்க்குங் குடியல்லோம் யாதுமஞ்சோம்' என்ற பெருந் தகைய ரருளின வருள்வாக்கின்படி பெருநலமெய்துவ ரென் பதிற் சிறிதுமையமிராது.

மு. சி. பூர்ணலிங்கம் பிள்ளை B.A., L.T.

---

# கோயிற் குறி

மெய்யுணர்வாம் உயிர்க்குறுதியை மேவிய பழம் பெரியார் தாம் அடைந்த உறுதியைத் தம் வழியினராய தமிழர் அடையு மாறு அருளுடையராய்த் திருக்கோயில்களைச் சமைத்தனர். சமைக்கும் கோட்பாடுகளை யவராலறிந்த வாரியர் அக்கோ யில்களின் அமைப்புக்கு அடியறியாது தாம் கோயிலமைக்கும் விதிகளை வரைந்துவைத்துக் கொண்டனர்போலும். கோயி லமைப்பை யூன்றியாயுங்கால் அறிஞராய பழையர் அடைந்த அருட்பெருஞ் செல்வத்தைப் பின்னோரடைதற்குச் சுவடாகக் கோயிலமைப்பு அமைந்துகிடப்பதாகத் தோன்றுகிறது. பண் டைப் பேரறிஞர் ஒரு பரம்பொருளை யடையப்பெற்றது தங்கள் உடம்பகத்தேயாதலின் உடல் முதலிய தத்துவக்குழாங்களையே கோயில் குறிக்குமாறு சமைத்தனர் என்னற்கு இடம்பெறக் கிடக்கும்.

மக்கள் ஆக்கையை ஏழு தாதுக்களாய தோல், குருதி, தசை, கொழுப்பு, எலும்பு, மூளை, கருநீர் என்பனவாகப் பிரிக்க லாம். இவ்வேழு பொருள்களாலானவுடலைக் கடந்த நாட்டம் பெறுவதற்காகச் சில வாலயங்கள் ஏழு சுற்றுமதில்களுள்ளன

வாக அமைக்கப்பட்டுள. பின், உண்டியாலாயவுறை, உயிர்ப் பாலாயவுறை, மனத்தாலாயவுறை, மதியாலாயவுறை, அறியாமையாய அவிச்சையென்பதாலாயவுறை யென்று உடல் தத்துவங்கள் ஐந்தாக அவர்கள் பிரித்தவகையின் குறியாகச் சிலகோவில்கள் ஐந்து சுற்றுச்சுவர்களையுடையவாகக் கட்டப்பட்டிருக்கின்றன. அவ்வுறைகட்கு அன்னமய, பிராணமய, மனோமய, விஞ்ஞாநமய, ஆநந்தமயகோசங்கள் என்று தத்துவப் பெயர்களைக் கற்பித்தார் ஆன்றோர். வேறாக, உடல் மூவகையென்றும் அவை புலப்படுவதென்னும் தூலம், புலப்படாததெனும் சூக்குமம், இவ்விரண்டுக்கும் மூலமெனும் காரணமென்பன. இவையிற்றைக்குறிப்பனவாகச் சில கோயில்கள் முப்பிரகாரங்களையுடையனவாகக் கட்டப்பட்டுள. மற்றொன்றாக, எல்லாங்கூடியுடம்பென்று கொள்ளத்தக்கதொன்றாக விருத்தலின் இதனைக் குறிக்கச்சில கோவில்கள் ஒரேபிரகாரமாய சுற்றுமதிலையுடையதாகவிருக்கும். கோவில்களின் மதில்கள் மக்களுடம்பினைக் குறிப்பதாகவுள்ளமை அறியத்தக்கது.

இனி, கோவிலின் உள் முற்றத்தில் கொடிக்கம்பமாய துவசத் தம்பமும், அஃதடுத்த பலிபீடமும், அணித்தாய நந்தியும், அவைகடந்து உட்சென்றவிடத்து மற்றோர் நந்தியும், அது தாண்டிச் சென்றுழிப் பிறிதோர் நந்தியும், அதன் முன்னர் சிவக்குறியும் ஆக ஆறு நிலைகளாகவுள்ளன. இவ்வாறு நிலைகளனும் உடம்பில் பெரியாரால் கற்பிக்கப்பட்ட மனம் நிறுவப் பெறுமிடங்களாய குறிக்கு முன்னிடம், குறியிடம், கொப்பூழ், மார்பு, கழுத்து, புருவம் என்னும் மூலாதாரம், சுவாதிட்டாநம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்நையெனத் தத்துவப் பெயருடைய ஆறு ஆதாரங்களெனும் இடங்களைக் குறிப்பனவாம்.

உடம்பின் நடுவே யமைந்துள்ள முதுகின் முள்ளந்தண்டெலும்பைக் குறிப்பது துவசத்தம்பம். அதன் உயரிய உச்சியானது பல சட்டங்களால் முன்னோக்கிப் படர்ந்துள்ளதாக அமைத்தமை முதுகெலும்பின் மேனுனியிடத்துத் தலை முன்னோக்கியிருப்பதைக் குறிக்கும். துவசத் தம்பத்தின் உச்சி

யிடத்தே காற்றினலைசந்து சில தகடுகள் கல்லென்றொலிப்பது உடம்பகத்தே மனம் நிறுவப் பெறும்போதே யொலியுணரப்படு மென்பதைக் குறிப்பதாம். பின்னும், கண்டாமணி யோசையும் பிரணவ வோசையினையே குறிப்பதாம். துவசத் தம்பத்துத் தகடுகளும் மணியும் நாதவொலியைக் குறிப்பன வெனப் பெற்றும்.

தூல, சூக்கும, காரணங்களாகப் பகுக்கப்படும் உடம்பின் முப்புரங்களாய முக்கண்டங்களில் மனவொருமைப் பயிற்சி சிறப்பாகச் செய்யப்படுவது பற்றி அம்மூவிடங்களிலும் மூவகையன வாய சிவக்குறிகளையும் அவற்றை நாடி உயிர் மனமடங்கப் பெற்று நிற்றலையும் பலிபீடம், தூபி, சிவலிங்கம் ஆய மூன்று லிங்கங்களாகவும் அம்மூன்று லிங்கங்கட்கும் மூன்று நந்திக ளாகவும் அமைத்தனர் ஆன்றோர். இதைச் சைவ சமய நெறி,

"தூல லிங்கமாந் தூபி சூக்குமமா முள்ளிலிங்க
மேலும் பலி பத்திரம்................."

என்று கூறுவது அறியத்தக்கது.

கோவில்களில் கர்ப்பக்கிருக முதலாய ஆறு மண்டபங் களும் ஆறுதாரங்களையே குறிப்பனவாக வமைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆறுதாரங் கடந்தவிடத்தை யறிஞர் ஆயிரவிதழ்க் கமலத்தில் சிவத்தைச் சத்திசூழக் காண்படுதென்று யோகநெறி யாற் கற்பிப்பதையே கோயில்களில் ஆயிரக்கான் மண்டபமியற் றிக் குறித்தனர் என்னலாம்.

அகவாலயத்தை முதன் முதலில் உயிர்க்கு உணர்த்தி யவ் வழிபாட்டை உயிராற்றல் முடியாது என்பது தெரிந்த பெரி யார் புறவாலயத்தை அகவாலயக் குறிகளமைய ஆக்கினர்.

புறவாலய வழிபாட்டால் உள்ளத்துறுதியும் தூய்மையும் அரும்பொருளுணரு மாற்றலும் உண்டாகப் பெறுதற்காக மக்க ளுக்கு அவ்வாலயாதி வழிபாடுகளால் சரியையாதி முதலிரு

நெறிகளை வற்புறுத்திப் பின்னர் அவ்வழிபாட்டினும் மிகச் சிறந்ததாம் அகவாலய வழிபாடெனா வழிகாட்டிச் சென்றனர்.

அஃதாமாறு—

“ திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே
உருக்கோலி மந்திரத்தா லெனினையு மவர்க்கு
முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும்
இருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோன்
மந்திரத்தின் வந்துதித்தே யிருஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண வொண்ணாத பான்முலைப் பால்விம்மி
யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவ னன்பர்க்கே”
(சித்தியார்)

‘அகத்தினுட் பூசை செய்வார்க் கருவருப் பில்லை கொல்லும்
பகைத்தொழி லில்லை யல்லற் படுதலு முடலுக் கில்லை
உகப்புறு பலமு மேலா முறும்பல முனையி னற்பம்
சகத்தினுட் பூசை செய்வார் தமக்கெலாம் வருத்தஞ் சார்ந்தும்”

“ சிறந்தகத்து ளான்மாவி லுறைசிவனைப் பூசையினைச் செய்யா னாகி
மறந்துபுறத் தினிற்பூசை வருந்தியே யியற்றுபவன் வயங்கு மாவின்
கறந்தபா லடிசிலகங் கையுளே யிருப்பதுந்தான் கண்டு ணாது
புறங்கையினை நக்குமவன் போலுமால் யாமறியப் புகலுங் காலே”
(சிவதருமோத்தரம்)

முதலிய அருண்மொழிகளால் அறியலாகும்.

இனி, ஓங்கார வரிவடிவை யொப்பது சிவலிங்கம் என்று முன் கூறியதும், ஓங்காரத்தினின்றே தமிழ் வரிவடிவாக்கப் பட்டதால் அஃது ஓங்காரத்தை மூலமாகவுடையது என்றுரைத்ததும் பெரியார் ஓங்கார வோசையாய நாதநோக்கை யோகநெறிக்குச் சிறந்த மூலமாகக் கொண்டிருப்பதனாலேயே யாம்.

“ அகார வுகார மிரண்டு மறியில்
அகார வுகார மிலிங்கம தாமே” (திருமந்திரம்)

" ஓமென்னும் பதமதனில் வேதமாதி
யுற்பவிக்கு மாலவித்தினு திக்குமாபோல்
ஓமென்னும் பதப்பொருளை யுணர்ந்தார்தாமே
யுணர்ந்தாரும் வேதாதி யொருமைகூர"

(சிவதருமோத்தரம்)

அகர உகர மகரங்களாகப் பிரணவமொழி பிரிக்கப்படுவதும், பிரணவத்தினின்றும் மெய்யுணர்வுற்ற தமிழ்ப் பெரியார் தமிழ்மொழியை யமைத்ததும் விளக்கும் இவ்வருட் பாக்கள் நிலை பெறுத்தும்.

சில கோயில்களில் நந்தி யொன்றே யாகவும், சிலவற்றில் இரண்டாயும் நிறுவப்பட்டிருக்கும். அது விதியறியாத பிற்காலத்தார் அமைத்ததென்றேனும், பழைய வாலயத்தினும் இத்தகைய குறைபாடிருப்பின் பின்வந்தோர் முறையறியாது இடமடைக்கப்படா திருக்கும் பொருட்டோ வேறெதனுலோ நந்திகளில் ஒன்றிரண்டு நீக்கியிருக்கக்கூடுமென்றுங் கருத விடமுண்டு. கொடிக் கம்பமுதல் சிவலிங்கம் வரை ஆறு களன்களாயின் ஆருதாரங்களையும் கடந்து ஆயிர விதழ்க் கமலாசனத்தே அரனிருப்பதாகக் கூறுவதோடு கோயிலமைப்பு முரணுறுவதாகக் கருதாமல் சிவலிங்க வடிவத்தின் அடிப்பாகம் இருபீடங்களாக அமைக்கப்பட்டிருத்தல் கொண்டு அவ்விரு பீடங்கள் வரையில் ஆருதாரங்களாயும், அப்பீடங்கள் மேல் நிலைபெற்ற சுயம் பென்னும் கம்பவடிவினை யாதாரங்கடந்து நின்ற மெய்ப்பொருள் குறிக்கும் குறியென்றும் அறிவோர் அறிவர். நந்தியென்பது செம்பொருளாஞ் சிவத்தை நாடி யுறுதி பெறுநெறியில் அடங்கிக் கிடப்பதாய உயிரினைக் குறிக்கும் குறியாம். உயிரானது செந்நெறி யுறுதற்குரிய பொறுமை, தன்னயமின்மை, அருள், அடக்கம், நன்றி மறவா நேர்மை, உதவி, அன்போடு கடமை தீர்த்தல் முதலிய நல்லாறுகளித்தும் நூனெறி கடைப்பிடித் தொழுகுதலாலாய அறமிகுதியால் மறங்குறைந்து உண்மைப் பொருளறிவு உளத்தில் உவப்போடு பொருந்தும் பேறுபெற்று நிலைத்தலாய சிறப்பொழுக்கமென்னும் களங்கமிலாத் தன்மை யடையப்பெற்று

உண்மைப் பொருளின் அருளை அண்ணாந்து அருளிரந்து நிற்பதையே நந்தி குறிப்பதாம். வெண்மை நிறத்தால் நந்தியை விளக்குதலானது மேற்கூறிய களங்கமற்ற நல்லொழுக்கம் நிறைந்தமையாம் சாந்த மென்னும் சத்துவகுணமே மிகையாக உயிருற் றிருப்பதையும் அந்நிலையின் அடைவே சிவம் உயிருக்கு அருள்புரிய உயிர் அடையவேண்டிய தகைமையா மென்பதையும் குறிப்பிடும்.

இவ்வாற்றான், உயிர் நல்லாற்றினின்று ஒழுகுவதால் உண்மைப் பொருளுணர்வுற வேட்கையும், செந்நெறியி னிற்குமாறு சிந்தையில் விளங்குதலும், மெய்யுணர்வு எளிதில் அடையப் பெறுதலும், அப்பேற்றால் ஆறுதலும் பேரின்பமும் கூடுதலும், சிறப்புறுதலும் ஆம் என்பது இனிது தேற்றமாம்.

“ குறிக ளுமடை யாளமுங் கோயிலு
நெறிக ளுமவர் நின்றதோர் நேர்மையும்
அறிய வாயிர மாரண மோதிலும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே”

என்னுந் தேவாரத்தால் அறநெறிபற்றி தீவினை தேய்ந்து சீர்நெறி நாடிச் செம்பொருள் கூடுதல் உயிரடையு முதன்மைப் பேறாம்.

S. K. S. ஆநந்தன்.

குறிப்பு—முன்னிதழில் வெளியான ‘தமிழ் மூலம்’ என்னும் பெருக்கில் சில குறைபாட்டால் பிழைபாடுற்றதைத் திருத்திக்கொள்ளுமாறு உயர்ந்தோர் வேண்டப்படுகின்றனர். கடந்த இதழின் ௬௪-ம் பக்கத்து சித்தியார் திருப்பாட்டின் எ-ம் வரியில் சித்தியென்றுள்ளதைச் சத்தியெனவும், அப்பர் அருட்பாட்டின் ௩-ம் வரியில் ஆரூராநெறியென்றுள்ளதை ஆரூராநெரியெனவும், ௬௫-ம் பக்கத்து ௫-ம் வரியில் விளக்குகின்றனர் என்பதற்கு ஓவியம்வல்லுநர் அல்லது அம்மதத்தினர் என்று எழுவாய் அமைத்துக்கொண்டும், ௬௬-ம் பக்கத்து அ-ம் வரியில் ஆம் என்னும் மொழியையடுத்த கால்புள்ளியை நீக்கியும், ௬எ-ம் பக்கத்து ௰எ-ம் வரியில் சிவமென்பது என்னும் தொடரை ௨௨-ம் வரியில் கடவுள் எனும்மொழிக்கு முன் கூட்டியும் அன்பர் படித்துக்கொள்ளக்கடவர்.

S. K. S.

# ஆண்டான் அடிமைத் தொடர்பு

ஆண்டானடிமைத் தொடர்பு என்பது சைவசித்தாந்தத்தில் ஓர் அரிய பெரிய உண்மை. இவ்வுண்மை உலகத்தில் மக்களுக்குள் விளங்கும் உண்மைகளுக் கெல்லாம் நடுநாயகமாய் விளங்குவது. இவ்வுண்மையின் விளக்கம் மக்களுயிர்க்கு உறுதிபயப்பது. ஆகையால் இவ்வுண்மையின் முக்கியமான சில குறிப்புக்களை மட்டும் நூல்களிற் சொல்லியிருக்கிறபடி சொல்வதுடன் உலக அநுபவத்திலும் பொருத்திக்காட்ட வேண்டுமென்ற கருத்துடன் நான் வரையலுறுகின்றேன்.

௨. முதலாவது சொல்விளக்கம்: இதில் சொற்றொடர் விளக்கமும் அடங்கும்: ஆண்டானடிமைத் தொடர்பு என்னும் தொகை நிலைத்தொடர் மொழி, ஆண்டான், அடிமை, தொடர்பு என்னும் மூன்று தனித்தமிழ் மொழிகளாலாகியது. இதனை விரிக்க ஆண்டானுக்கும் அடிமைக்கும் உளதாகிய தொடர்பு என விரியும்.

௩. ஆண்டான் என்னும் மொழி ஆள் என்னும் பகுதியடியாகப் பிறந்த இறந்தகால வினையாலணையும் பெயர். ஆள் என்பது ஆண்மை என்னும் பண்புப் பெயரடியாகப் பிறந்த வினை. ஆண்மை என்பது ஆளுந்தன்மை என்று பொருள் படும். ஆண்டான் என்பது உயிர்களை யெல்லாம் ஆளுந்தன்மையையுடைய கடவுளைக் குறிக்கின்றது. உயிர்களை எல்லாம் ஆளுந்தன்மையை யுடையவன் ஆதலின், அவன் முழுமுதற் கடவுள் எனப்படுவான். முற்றறிவுடைமை முதலிய எண் குணங்களும் உயிர்களை ஆளுந்தன்மைக்கு அவனுக்கு வேண்டப்படுவனவாகும்.

௪. அடிமை என்னும் பண்புச் சொல் ஒருவனுக்குள் அடங்கி அவனுக்குத் தொண்டுசெய்யும் தன்மையைக் குறிக்கின்றது. தொண்டுசெய்யும் தன்மையிலிருந்து பின் உலக வழக்கில் தொண்டுசெய்யும் ஆள் என்னும் பொருள்பட அது

வந்தது. வேலையாள், தொண்டன், தொழும்பன், பணியாளன் என்பன ஒரு பொருட்சொற்கள். ஆகவே, அடிமை என்பது ஓர் ஆண்டானால் ஆளப்பட்டு அவனுக்குள் அடங்கித் தொண்டு அல்லது பணிசெய்பவன் என்று பொருள்படும். திருநாவுக்கரசு சுவாமிகளும் இவ்வடிமைத்தன்மையை "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்று தாம் அருளிச்செய்த தேவாரத்தில் குறிப்பித்தார்கள்.

௫. ஆளப்படுந்தன்மை என்பதும், அடங்குந் தன்மை என்பதும் ஒரு பொருளன. ஆளுந்தன்மையும் ஆளப்படுந் தன்மையும் அல்லது அடங்குந் தன்மையும் பொருளில் ஒன்றையொன்று அவாவியுள்ளன. ஆண்டான் என்னும் மொழியின் பொருளை அறியுமிடத்து அடிமை என்னும் மொழியின் பொருளையுஞ் சேர்த்து அறிந்தாலன்றி கருத்து நிரம்புமாறில்லை. அடிமை என்னும் மொழியின் பொருளை அறிதற்கும் இஃதொக்கும்.

'தானலாதுலகமில்லை, சகமிலாதடிமையில்லை'

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியதும் இக்கருத்தை விளக்குகின்றது.

௬. உலகிலுள்ள எல்லாச்சமயங்களும் கடவுளை ஆண்டான் அல்லது ஆண்டவன் என்னும் பெயரால் அழைக்கின்றன, அதாவது கடவுள் உயிர்களை ஆளுந்தன்மையுடையவன் என்பதை மறுப்பதில்லை. ஆனாலும், சிலசமயங்கள்தான் உயிர்கள் கடவுளுக்கு எப்பொழுதும் அடிமைப் பொருள்கள் என்பதை ஒப்புக்கொள்கின்றன.

௭. ஈஸ்வரன் என்னும் வடமொழிக்கும் ஆளுகிறவன் என்பதே பொருள். ஈஸ்வரன் என்னும் பெயரானும் சமயங்கள் எல்லாம் தத்தங் கடவுளை அழைக்கின்றன. பரமேஸ்வரன் என்னும் சொல் சிவபெருமான் ஒருவனையே குறிக்கின்றது. சொல் வழக்கிலுங்கூட ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மை விளங்குவது காண்க.

அ. இனி, தொடர்பு என்பது தொழிற் பெயர் ; தொடர் என்பது பகுதி, பு என்பது தொழிற்பெயர் விகுதி. தொடர் என்னும் பகுதியிலிருந்து தொடர்வு, தொடர்ச்சி, தொடர்தல், தொடர்ப்பாடு என்னும் தொழிற்பெயர்களும் வந்தன. அவைக ளெல்லாம் ஒருபொருளைக் குறிப்பனவாகும் : தொடர்பு என்பது பின்போதல், பிடித்தல், பற்றுதல், சேர்தல், தழுவுதல், கலத்தல் என்னும் கருத்துக்களை உணர்த்துகின்றன. இக்கருத்துக்கள் முறையே ஒன்றின்பின் ஒன்று, இரு பொருள்களுக்குமுள்ள நெருக்கத்தை அதிகமாய்க் காட்டுகின்றன. பகுதி மாத்திரை யாய் நிற்கும் தொடர் என்னும் முதனிலைமொழி ஆகுபெயரான ஒன்றனையொன்று பற்றியிருக்கிற பல வளையங்களாலாகிய சங்கி லியைக் குறிக்கின்றது. இவ்வாறாக தொடர்பு என்பது முதலில் வெளிப்படக்காணும் உருவப் பருஉப் பொருள்களுக்குள தாகிய பற்றுதலைக் குறித்துப் பின் அகத்தினிகழும் அருவப்பொருள்க ளின் பற்றுதல் என்னும் உறவு, நட்பு என்னும பொருளினும் வந்தது.

௯. இவ்வாறாக, ஆண்டான் அடிமைத்தொடர்பு என்பது ஆண்டானாகிய கடவுளுக்கும் அடிமையாகிய உயிர்க்கும் இயல்பான் உளதாகிய பற்றுதல் என்று பொருள்படும். இப் பற்றுதலில் கடவுள் உயிரைப் பற்றுதலும் உயிர் கடவுளைப்பற்று தலும் அடங்கும் ; இப்பற்றுதல் வடமொழியில் சம்பந்தம் என்று சொல்லப்படும்.

## இரண்டாவது ஆண்டான் அடிமைத்தொடர்பு உண்மைவிளக்கம்.

௰. மேலே கூறியபடி கடவுளுக்கும் உயிருக்கும் உள தாகிய பற்றுதல் அநாதியேயுள்ளது ; எப்பொழுதுமிருப்பது ; ஒருகாலமும் விட்டு நீங்குவதில்லை.

௧௧. கடவுளும் உயிரும் அறிவுடைப்பொருள்கள் : ஆதலி னாலே, இரு பொருள்களுக்கும் இப்பற்றுதல் உளதாயிற்று. அறிவு இல்லாவிடின் இப்பற்றுதலும் உளதாகாது.

௧௨. கடவுளும் உயிரும் அறிவுடைப்பொருள்கள் என்று லும் இவ்விருவேறு அறிவுக்கும் வேறுபாடு உண்டு. கடவுள் அநாதியே மலரகிதனுய்க் கருவிகளோடு சேராது எல்லாவற்றை யும் ஒருசேரத் தானே அறியும் பேரறிவுடையன். உயிர் அநா தியே மலசகிதனுய் கேவலநிலையில் மூலமலத்தினுல் மூடப்பட்டு முற்றும் அறியாமையையும் சகலநிலையில் கருவிகளோடு சேர்ந்து கடவுளை அறிவித்து மூலமலமறைப்பு நீங்க நீங்க ஏக தேசத் தன்மையில் மயங்கி அறிகிற அறிவையும், சுத்தநிலையில் கடவுள் அறிவித்து மூலமலமறைப்பு முற்றும் நீங்க அவனுடன் அத்துவிதமாய்க் கலந்து அறிகிற தெள்ளறிவாகிய உண்மை யறிவையும் உடையது.

௧௩. இவ்விதமான அறிவு வேறுபாட்டினுல் கடவுள் உயிரைப் பற்றும்நிலை எனவும் உயிர் கடவுளைப்பற்றும் நிலை எனவும் இப்பற்றுதல் இருவகைப்படும்.

௧௪. கடவுள் உயிரைப்பற்றும் நிலை என்றும் ஒரு தன் மைத்தாயுள்ள இயல்புநிலையாகும். இந்நிலையில் கடவுள் உயிரினிடத்து என்றும் பெருங்கருணை யுடையவன். கடவுள் உயிரின் மாட்டுவைத்துள்ள பெருங்கருணையினுல் உயிர் பய னடைதற் பொருட்டே ஐந்தொழிலும் செய்கின்றுன். ஐந் தொழில் செய்வதில் அவன் தனக்கு யாதொரு பயனும் வேண்டு வானல்லன். அவன் இவ்வைந்தொழிலையும் சலிப்பின்றி செய் வதில் விகாரமடைவான் அல்லன்.

௧௫. உயிர், கடவுளைப்பற்றும் நிலையில் உயிரினுடைய அறிவின் தரத்துக்குத் தக்கவிதமாய் அவனுடைய அடங்குந் தன்மையும் பலதிறப்படும். உயிர் தன்னுடைய பெத்தநிலையில் முதலாவது கடவுள்தன்னை அருளால் ஆளுதல் செய்கின்றுன் என்று அறியாமலும், பின் நூலறிவாலும், கேள்வி அறிவாலும், உலக அநுபவ அறிவாலும் தன்னுடைய அறிவு வளர வளர கடவுளின் ஆளுந்தன்மையை ஏகதேசமாய் அறிகின்றுன். உயிரினுடைய அறிவு வளர்ச்சி கடவுளினுடைய ஆளுந்தன்

மையை அறிதலைப் பொறுத்தேயுள்ளது. ஆகலின் ஒருயிரின் அறிவு வளர வளர அவன், கடவுள் தன்னை ஆளுந் தன்மையை அறிந்து அவனிடம் அடங்குந்தன்மையையும் அதிகமாக உடையானாகின்றான்; அதாவது அவ்வுயிருக்குக் கடவுளிடத்து இயல்பாயுள்ள அடிமைத்தன்மை வளர்ந்து பெருக்கமடைகிறது. இதுதான் நூல்களில் சோபானக் கிரமமான உயிர் வளர்ச்சி என்று கூறப்படும்.

(தொடரும்)

M. V. நெல்லையப்ப பிள்ளை யவர்கள், B. A.

---

# தத்துவ விளக்கம்

## பதிவிகாரம்

சித்தத் துவந்தெமக் கின்பம் படச்சென்னி மேலிருந்து
மெத்தத்து வங்கட்கு மேலா வனவிக வார்பசு நூற்
கொத்தத்து வந்து குறுகா தனகொச்சை மன்னவன்று
ளித்தத் துவவிளக் கம்பகர் வான்பணிந் தேத்துவமே. (க)

மேடுங் குழியும் விழுந்தேன் விழுங்க வெழுந்துவிண்ணைக்
கூடும் பொழிற்கொச்சை வேந்தன் குரைகழற் கன்பர்குன்றுங்
காடுங் கடுஞ்சுர முங்கட லேழுங் கடந்தரிதிற்
றேடும் பொருளினுஞ் சேர்ந்தவுற் றாரினுஞ் சீரியரே. (உ)

சீரார் கயிலைத் திருவாய் மலர்ந்த சிவாகமங்கற்
றாராய் வதுவட சொற்பயின் றார்க்கெளி தம்மொழியைச்
சாரா தவருந் தத்துவ ஞானந் தலைப்படுதற்
கோரார் தமிழ்ச்செய்யு ளான்மைய றீர வெழுதுவனே. (௩)

எழுமென தாசை முடித்தற் குளவெழு தாமறையும்
வழுதிதன் கூனு நிமிரவந் தாண்டன வையமுய்யக்
கழுமல வாணருந் தேவியுங் கண்டுதங் கண்களிப்பச்
செழுமலர் வாவிக் கரையினின் றாடிய சிற்றடியே. (௪)

சிற்கனன் றன்னிக ரின்றிப் பரந்தோன் சிதைவறியா
வொற்கமி ரேற்றத் துயர்ந்தோ னுறுதுக ளொன்றுமில்லோன்
சொற்கலை ஞாலத்து வித்தாய வன்றுற வெங்குமில்லோ
னற்கரு ணையன் வாழிதென் காழி நயந்தவனே. (ரு)

நயந்த பிறப்பொடு நாசமில்லாதது நாடினர்தாம்
வியந்தரு வீடெய்த வீடொன்றிலாததுமிக்கறிவா
லுயர்ந்த துலகங்க ளாகுந் தொழில துயர்தரங்கக்
கயந்திகழ் காழிப் பிரானெளி யாகிய காரணமே. (சு)

காரண மாகிய காழிப் பிரா னுக் கணுதியிந்தப்
பாரள வாகப் பரக்கும் புவன திகள்படைப்பப்
பேரள வாகுந் தொழிற்பிற மூாத கருவியதாய்ச்
சீரள வாமனின் றுள்செய்ய தாளென் சிரத்தனவே. (எ)

தனதுயர் தத்துவந் தான்பரஞ் சத்தி கருவியிப்பால்
வினைதரு வையம் பிறந்தும் விரிந்து மொடுங்குமிந்தச்
சினிமலி தத்துவந் தன்னிற் சிரபுர நாதனுமக்
கனமலி பூண்முலை யுங்கருத் தாவுங் கருவியுமே. (அ)

கருமல பாச மசேதனங் கட்டுண்பர் சேதனரென்
றிருமையில் வைய மடங்குமென் றெண்ணுக வித்துணையே
திருமலி யாகமஞ் செப்பியவான் பொருண் முற்சிறந்த
விருவரு மேகட்டு வார்விடு வாருமென் றெய்துமினே. (கூ)

எய்தும் பொருளொரு மூன்று பதிபசு பாசமென்றே
மெய்தந்த வாகமங் கூறு மிவற்றினுள் வெங்குருவாழ்
மைதங்கு கண்டன் பதிபசு வென்ப தணுக்கண்மற்றைக்
கைதந்த பாசங்க ளாணவ மாயையுங் கன்மமுமே. (க0)

கன்மனந் தன்னைக் கனிவிக்குங் காழிப் பிரான்கருணைப்
பன்மைப் படுந்தொழி லைந்து படைப்பு நிலைதொகுத்த
லின்மை நிகழ்ந்த வொளிப்புத் துயர்நின் றெடுத்தலென்ப
வன்மைப் படாநிலை மைப்பெரி யோனுக் கமைந்தனவே. (கக)

பதிவிகார முற்றும்

## பசுவிகாரம்

அமையா நிலைமை யணுக்களோர் மூன்று வகையவைதாங்
கமைவா னிறைந்தவிஞ் ஞான கலர்பிர ளையகலர்மற்
றிமையா ரிமைப்பவ ராகுஞ் சகல ரிவரின்முன்னோர்
தமையா ரெனின்மல மேயவை சேடித்த தன்மையரே. (கஉ)

தன்மை யொழிக்குமப் பாசமுங் கன்மமுஞ் சார்ந்துமற்றைப்
பின்னொரு பாசமில் லார்பிர ளையாகலர் பேசியவக்
கன்மமு மாயையு மாணவ முங்கலந் தார்சகல
ரென்னு மிவரின்முன் னோரிரு பான்மைய ரென்றறியே. (கங)

அறிந்தவர் தீர்ந்த துகளினர் தீராத் துகளர்முன்னர்ச்
செறிந்தவர் விஞ்சைக்கு நாயக ரெண்ம ரெனச்சிறந்தோர்
பிறிந்தவர் மந்திர ராமெழு கோடியர் பேரருளான்
மறிந்த திரைப்புனல் வெங்குரு வாணன் வகுத்தவரே. (கச)

வகுத்த வரிற்புவ னாதிப ரேனையர் மற்றவர்பின்
னொருகுத்த வரிற்பந்த முற்றினர் தூநெறிச் செல்வர்பின்பால்
மிகுத்தவர் தாம்புரி யட்டகத் தோடும் வினைவழியிற்
பகுத்த பிறப்பிற் சகலர்முப் பாசமும் பற்றினரே. (கரு)

பற்றிய சத்தப் பரிச முருப மிரதகந்தம்
மற்றை மனம்புத்தி யாங்கார மென்றிவை வல்வினையாற்
சுற்றி யமைந்த புரியட் டகமென்று சொல்லுவர்வான்
பெற்றி யமைந்த பிரமா புரந்தொழப் பெற்றவரே. (கசு

பெற்ற தவப்பய னாற்பிர ளையாகல ரிற்சிலரைக்
குற்றமின் மந்திர நாயக ராக்குமெங் கொச்சையர்கோன்
மற்றவர் மண்டல வீரர் சீகண்டர்சீ
ருற்ற வுருத்திர ரெட்டோடு பத்துநூ றெண்ணிவர்க்கே. (கஎ

எண்ணும் வினைப்பய னாற்புவ னந்தொறும் போகமென்று
நண்ணி வருஞ்சக லர்க்கொரு கால நயந்திங்ஙனே

பண்ணிய கன்மந் தொலையொத் துழிச்சத்தி பாதமுறக்
கண்ணிய லுங்குரு வாய்க்காழி வேந்தன் கதிதருமே. (க அ)

பசுவிகார முற்றும்

## பாசவிகாரம்

கதிதரு காழிமன் கட்டுமப் பாசங்கண் மூன்றவைதாம்
பொதிதரு மாணவம் போகஞ்செய் கன்மமு மாயையுமா
முதியது தானென்று முன்பி னிலாதது சேதனன்கண்
ணதிக மறைப்பன வாயிர கோடி விருத்திகளே. (கக)

விருத்திக ளான்மறைக் கின்றவவ் வாணவம் வெங்குருமன்
கருத்திய னூன்முறை தேரிற் கலந்துட னுயனுவை
யருத்தி [மயக்க]ஞ்செய் மோகஞ்செய் தாசை யனுபவத்திற்
பெருத்திடச் செம்பினிற் காளிதம் போலப் பிணைந்துளதே.(உ0)

பிணைந்தவப் பாசம் பெருக்கியவ் வாசை யனுநுகர்தற்
கணைந்தன கன்ம மிருவகைத் தாமறம் பாவமென்ப
தணைந்தும் பிணைந்துந்தன் சார்பினிற் றோன்றுமன் சன்னிதியா
லுணர்ந்தவர் வித்தும் வினைவுமொப் பாமென வோதுவரே. (உக)

ஓதிய வல்வினை யூட்டக் கருவி யுடம்புலக
மாதிமைப் போகமு மாய்நின்ற மாயை மயங்குவித்தே
போதந் தரும்பொரு ளாகிநிற் கும்புவ னாதிகளுக்
காதியு மாய்விரிந் தந்தமுமாகி யொடுங்கியதே. (உஉ)

ஒடுங்கிய பாசத் தொகையொரு மூன்று முறுதொழிலிற்
றுடங்கிய போது துணைமையிற் றோணி புரத்துறையும்
விடங்கெழு கண்டர்தஞ் சத்தித னேவலின் மற்றதுவும்
படர்ந்தெழு பாசமென் றாரவை யூக்கஞ்செய் பான்மையரே. (உங)

பாசவிகார முற்றும்

(தொடரும்)

L. உலகநாத பிள்ளை.

# எண்பெரும் சித்திகள்

இறைவனது திருவடிக்கு மெய்யன்பு பூண்டொழுகும் பெரியார்பால் பல செயற்கரும் செயல்கள் நிகழ்கின்றன. அவர்கள் இறைவனருளால் விண்ணிற் பறப்பார்கள், கனல்மேல் இருப்பார்கள், நீர்மேல் நடப்பார்கள், கரடி வெம்புலி வாயையும் கட்டுவார்கள். மாண்டவர்களையும் மீண்டுவரச்செய்வர் என்னின் அவர்களுக்கு அருமையாவதொன்றுண்டோ? சிவநெறிச் செல்வராகிய நம் தாயுமான சுவாமிகள்,

“ கந்துகமதக் கரியைவசமா நடத்தலாம்
கரடி வெம்புலி வாயையுங்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்
கட்செவி எடுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்
விண்ணவரை யேவல் கொளலாம்
சந்ததமு மிளமையோ டிருக்கலாம் மற்றொரு
சரீரத்தினும் புகுதலாம்
சலமேல் நடக்கலாம் கனல்மே லிருக்கலாம்
தன்னிகரில் சித்தி பெறலாம்”

என்று திருவாய் மலர்ந்தருளிய அருமைத் திருவாக்கில் காணும் பெரும் செயல்களும், இவைபோல்வனவும் எண்பெரும் சித்திகளுள் அடங்கும். இச்சித்திகள் (1) அணிமா, (2) மகிமா, (3) லகிமா, (4) கரிமா, (5) பிராப்தி, (6) பிராகாமியம், (7) வசித்துவம், (8) ஈசத்துவம் என்பன. இவைகளை ஒன்றன்பின் ஒன்றாக ஆராய்வோம்.

## அணிமா

அணிமாவாவது அணுவாகும் தன்மை. அணுவைக்காட்டிலும் நுண்ணிய பொருள்களை ஆராய்வதற்கு இது உதவியாம்.

தன்னை மிகநுணுகிய உருவாக்கி வேறொருவர் காணாமல் உலகத் துலாவுதற்குச் செய்யும் சித்தி இதுவே. தன் உயிரும் உடலும் அணுவினும் குறுகவே அணுக்களெல்லாம் பெரிய உருவொடு நன்கு புலனாம். ஓர்கால் விண்ணவர் பலரும் கைலையை அடைந்து சிவபெருமானைக் காணத்தேடினர். அவர்கள் தங்கள் முன்னாலே அப்பரம் பொருள் நின்றிருந்தும் காணாமல் திகைத்தனர்; இங்ஙனம் இறைவன் அவர்களுக்கு முன்னர் இருந்தும் கட்புலனாகாதிருந்தது அணிமாவாம். இதுபற்றியே மணிவாசகனார்,

"அணு அணுவில் இறந்தாயென்று அங்கு
எண்ணந் தான் தடுமாறும்
இமையோர் கூட்டம் எய்துமாறு அறியாத எந்தாய்"

என்று அருளியதும். இதுகருதியே, பிறரும் இறைவனுடைய தன்மையைச் சுட்டுமிடத்து,

"அண்டங்கள் எல்லாம் அணுக்களாக அணுக்களெல்லாம்
அண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினானும்"

என்றனர். இதனையே மணிமொழித்தேவர் பிறிதோரிடத்து,

"இத்தந் திரத்தில் காண்டுமென் பவர்க்கு
அத்தந் திரத்தில் அவ்வயின் ஒளித்தும்"

என்று அருளினார். முன்னொருகால் நம் அகத்தியமுனிவர் தேவர்கோமகன் வேண்டுதலுக்கிணங்கிக் கடலை உழுந்தளவாக்கி உண்டருளினார் என்ற செய்தி உலகறிந்ததன்றே? இதுவும் அணிமா என்ற சித்திக்குத்தக்க சான்று பகருவதாகும். இனி மகிமா என்ற சித்தியை ஆராய்வோம்.

## மகிமா

அணுக்களெல்லாம் அண்டங்களாக விரியுமாறு காண்பது மகிமாவாம். அதாவது தன்னுருவை மிகப்பெரியதாக விரித்து ஏனைய உருவங்களெல்லாம் தன்னைக்காட்டிலும் சிறியனவாகத்

தோன்றுமாறு நிற்றல். இதனால் உலகடங்கலும் தன் உடலாம்படி விரிந்து அதனைத் தன்வழி நடத்தலும் இயலும். அருட்கடலாகிய முருகக்கடவுள் சூரனை வெல்லுமாறு படையெடுத்துச் சென்றபோது சூரன் தம்பி சங்கமுகனென்பான் ஆயிரம் தலைகளோடும் அண்டமுகட்டை அளாவிவளர்ந்து, பூதக்கூட்டங்களை விழுங்கப் புகுந்தது, இம்மகிமா என்ற சித்தியாலேயே. அவனை வேலால் வென்ற முருகக்கடவுள் அவனுக்கு முன்பிறந்தானாகிய சூரபதுமனை வெல்லப்புகுந்தபோது அவர் ஆற்றல் கண்டஞ்சிய வெஞ்சூரனும் கடல் நடுவணோடி மாமரமாகி தலைகீழாக மேலும் கீழும் ஓங்கி அண்டங்களெல்லாம் கலங்கி மாறுகொண்ட கோலமும், அவன் வெருக்கொளும்படி அப்போது அப்பிரான் காட்டிய பேருருக்காட்சியும் இம்மகிமாவை விளக்கும் வழியில் தக்க சான்றுகளாம். ஒவ்வோருயிரும் முதலில் காட்டிய அணிமாவையும் இம்மகிமாவையும் இயல்பிற் கொண்டுள்ளனவே. எவ்வாறெனின்? கருவுருவடையும் போது மிகச் சிறிதாயிருந்து பெரிதாகிப் பிறந்து வளர்ந்து, இவ்வலிய உருவடைவது மகிமாவாம்; பின்னர் உயிர் உடலை விட்டுப் பிரியும் போது அணுவுருவாவது அணிமாவாம். இனி லகிமாவை ஆராய்வோம்.

## லகிமா

தன் உடலினும் பிற பொருள்களினும் உள்ள கீழமுத்தும் வலியை அவ்வாறு செய்யாதபடி கெடுப்பதே லகிமாவாம். மேல் நோக்கும் வலியை மிகுவிப்பதும் இச்சத்தியே. சைவ சமய குரவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் தம்மைப் பல்லவ மன்னன் கற்றூணினிடைக் கட்டிக் கடலில் பாச்சியபோது இறைவன் அருளால் ஐந்தெழுத்தோதி அக்கற்றூணை மிதக்கும்படிசெய்து கரையேறியது இச்சித்தியே. நீர்மேல் நடத்தற்கும் விண்ணிலுலாவுதற்கும் இச்சித்தி கைவரவேண்டும்.

## கரிமா

கடுகை மலையளவு கனமுடையதாகக் காட்டும் சித்தியே கரிமாவாம். இது கீழமுத்தும் வலியை மிகுவித்தலே. திரு

நல்லூரிலே அமர்நீதி நாயனுர் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். அவர் அடியார்களுக்கு உணவும் கோவணமும் தரும் பெருமை யுடையார். அவர் அன்பை உலகினர்க்குக் காட்டியருளத் திருவுளங்கொண்டு சிவபெருமான் அவர்முன் தோன்றி ஓர் கோவணத்தைத் தந்து அதனை மறையுமாறு செய்து பின் அவரிடத்து வந்து தாம்தந்த கோவணத்தைத் தரும்படி கேட்டார், அடியவரோ அதனைக் காணுது திகைக்க, தாம் அவரிடத்துத் தந்தருளிய கோவணம்போன்ற வேறொன்றைத் தராசின் ஒரு தட்டிலிட்டு அதற்கு ஒத்த நிறையுள்ள கோவணம் தருமாறு ஆணையிட்டார். அமர்நீதியாரோ மற்றைத்தட்டில் தம்மிடமுள்ள கணக்கிறந்த கோவணங்களையும், பட்டாடைகளையும் மணியையும், பொன்னையும் வைத்தும் கோவணத் தட்டோடும் ஒத்த நிலையுருதது கண்டு தாமும் தம்முடைய மனைவியும், மகனும் அத்தட்டிலே ஏறி நின்றனர். அப்போது சிவனருளால் இருதட்டும் ஒத்தநிலை யுற்றன. இங்ஙனம் சிவனர் ஒரு சிறு கோவணத்திடை மேருவினும் பெரும் பாரம் வரும்படி செய்த சித்தி இக்கரிமாவாம். இனி பிராப்தியை ஆராய்வோம்.

(தொடரும்.)

கோவிற்பட்டி E. M. சுப்பிரமணிய பிள்ளை

---

# மொழிகள் வெளியிடு முண்மை

## வல்லின இடையினப் பிறழ்வு

(௯௰-ம் பக்கத் தொடர்ச்சி)

அறுப்பு

வேளாண்மை செய்வோர்க்கு இனிமையளிக்கு மிச்சொல், மண்ணுடனும் பயிருடனும் தொடர்புடையதாயினும் ஊன்றிப் பார்க்குங்கால் உயர் வெய்துவதற்கு இன்றியமையாதனவாகிய காட்சி, புலமை என்பவற்றுடன் கேண்மைகாட்டி நிற்குமொரு

மொழியாகும். கண்டவற்றிலிருந்து காணாதவற்றிற்குப் பெயர் கொடுத்தலே எம்மொழியிலும பொதுவாக நிகழுமுறை. வாய்மை, காட்சி எனும் உயர்பெயருடைய மொழிகள் வாய், கண் என்ற உறுப்புப் பெயர்களிலிருந்து வருவனவென்பது பொருந்தும். உயர்வு, தாழ்வு, மேன்மை, கீழ்மை முதலிய வெல்லாம் நிலத்திற் காணப்படும் ஏற்றத் தாழ்ச்சிகளினின்றும் பெறப்படுவனவே. துணித்தான், துணிந்தான் இவையிரண்டும் 'துணி' என்ற ஒரே முன்னிலையாற்பிறந்து பொருள்வேற்றுமை யுடையனவாய் வழங்கிவருதல் தெளிவாகிறது, இவற்றுக்குள்ள வேற்றுமை, காணப்படும் நிகழ்ச்சிக்கும் காணப்படா நிகழ்ச்சிக்குமுள்ள வேற்றுமையேயன்றி வேறன்று. துணி=வெட்டு; துணித்தான்=வெட்டினான், அதாவது ஒன்றை மற்றொன்றினின் றும் பிரித்தான். (துணியென்பது பெயராயின் துணிக்கப்பட்ட தைக்குறிக்கும்; துண்டு என்பதற்கும் பொருளதுவே.) துணிந் தான்=உளத்தால் ஒன்றை மற்றவற்றினின்றும் பிரித்து உணர்ந் தான், அல்லது எண்ணங்கள் பலவற்றாலெழும் ஐயங்களை அறுத்து முடிபிற்கு வந்தான். இவண் வெட்டுதலென்ற புறத் தொழில் அகத்தின்மே லேற்றப்பட்டது. துணிந்தானென்பதே இவ்விரண்டில் முந்தியது; அது அகத்தில் நிகழும் செய்தியை உணர்த்தி நிற்குமிடத்தை ஐயமறக் காட்டுவதற்குத் தகர வொற்று நகரவொற்றாயிற்று. இங்ஙனம் நிகழ்கால வினைமுற்றுக் களாகிய துணிக்கிறான், துணிகிறான் என்பவற்றிலும், தொழிற் பெயர்களாகிய துணித்தல் துணிதல் என்பவற்றிலும் கட்புல னாய்த் தெரியும் வேற்றுமை பொருள்வேற்றுமையா லாவதே. நடந்தான், கடந்தான், பணிந்தான் என்பவற்றில் மெல்லின மாகிய நகரவொற்றுவருதலும், அடித்தான், உதைத்தான், இழுத்தான் என்பவற்றில் நகரந் தோன்றாமையும் பொருள் வேறுபாடுபற்றியேபோலும், முடித்தான், முடிந்தான் (=முடிப் புப்போட்டான்) என்பவற்றையும் முன்சொன்னவற்றுடன் ஒப் பிடுக.

'போ' எனுமடியிலிருந்து, 'இன்' இடைநிலைபெற்றுப் போனான் ('இன்' முதற்குறைந்தது) என்றவினைமுற்றுத் தோன்று

மாறே ‘வா’ என்பதிலிருந்து வானன் அல்லது வாவினன் என்று வினைமுற்றுக்கள் வருவதற்குத் தடையில்லை. ஆனல் அதனல் நிகழும் குழப்பம் பெரிதாகுமாதலின் அங்ஙனம் வினைமுற்று அமையப்பெறாது ‘வந்தான்’ என்று சிறிதுவலிந்து முடிக்கப் பெற்ற சொல்லாய் நிற்பது காணத்தக்கது. பொருளைநோக்கியே சொல்லமையுமென்பது இதனல் நன்கு விளங்கும். “விளம்பிய பகுதி வேறாதலுமுரித்தே” என்றுகூறிய நன்னூலார்க்கு உரையெழுதப் புகுந்தோர் உளம்போனவாறு மொழிந்தார். வந்தானென்ற சொல்லில் முதல்நிலை ‘வம்’ என்றார் மயிலைநாதர். அங்ஙனமாயின் நடந்தானென்பதில் ‘நடம்’ என்பதே முன்னிலை யென்பதும் பொருந்தும். நன்னூலாரும் அவர் உரைகாரரும் தமிழின் தனிமையை யறியாது இயற்றிய பிழைகளால் விளைந்த தீங்கை ஒழிப்பதற்கு வேண்டிய முயற்சிகளைத் தமிழ்மக்கள் விரைந்து செய்வாராக. ”இடுகுறிகாரணப்பெயர் பொதுச்சிறப் பின்” என்றொருகட்டளைசெய்ய, அது எழுத்தியற்கையைக் கூற வந்ததை மறந்து மரம், பொன்னன் முதலியவற்றை எடுத்துக் காட்டாய்த் தந்தது பெரியவிந்தையே. எழுத்துக்களுக்கு உயிர், மெய் என்ற பெயர்கள் வந்தது இடுகுறியால் என்று மயிலைநாதர் விளம்புவதும் விந்தையே. அன்றியும் மரம், நிலம் முதலியவை இடுகுறிப் பெயர்களென எங்ஙனந் துணிவதோ யாமறியேம். தமிழுக்குப் புத்துயிர் அளித்த சிவஞானமுனிவரது பேராற்ற லினலன்றே நன்னூலின்னும் தமிழ்நாட்டி லுலவுவது.

மேற் கூறியவற்றல் பொருள் சிதைவுறாவண்ணம் சொற்க ளின் அமைப்பு இயற்றப்படுமென்பது கண்டோம். அறுப்பு என்பதில் ‘அறு’ முதல் நிலை; அறுவை, அறம், அற்றல், அறுதி அற்றம் என்பனவெல்லாம் ‘அறு’ வால் தோன்றுவனவே. அற்றம்=முடிவு (குறள், குற்றங்களைதல் செய்யுள் ௪) அறுவை= துணி, அறுக்கப்பட்டது. (சிறுபாணாற்றுப்படை; வரி ௨௩௬ —236) அறம்=வரையறுக்கப்பட்டது. அறல், அறுத்தல், அறுகை முதலியவற்றையும் ஆராய்க. ஆறு, அறை என்பவை யின் தோற்றம் உணரவெளிதே. அறுத்தலென்பது பிரித்தல்;

துணித்தலென்பதன் பொருளும் அதே. உளநிகழ்ச்சியைக் காட்டும் பொருட்டு துணித்தலென்பது துணிதலென்று நின்ற வாறு அறுத்தலென்பது அறிதலென்று நிற்கும். ஆதலின் அறிதல்=உணர்தல் (பகுத்துணர்தல் - பிரித்துப் பார்த்தல்) ஒரு பொருளை அதற்குத்தொடர்புடைய மற்றவற்றினின்றும் பகுத்து அல்லது பிரித்து அல்லது அறுத்து நோக்குவதே காட்சி என்பது முன்னோர் வகுத்த முடிபு. ஆதலின் அறிதலென்பது அறுத்தலென்பதன் வேறுபாடு. குறு என்பதிலிருந்து குறிது, குறியன் என்றும், சிறு என்பதிலிருந்து, சிறியர் என்றும் சொற்கள் தோன்றுமாறு அறு என்பதிலிருந்து அறிதல் பிறந்ததெனக் கொள்க. பொருளைப்போற்றவேண்டி அறுத்தல், அறிதல் என சொல்வேற்றுமை தோன்றிற்றென்க. வடமொழியில் அறிவுள்ள வற்றை சேதனமென்றும் அறிவில்லாதவற்றை அசேதனமென்றும் கூறுவது காண்க. (சேதம்=வெட்டுதல்; சேதித்தான், சிறைச்சேதம் முதலியவற்றை நோக்குக.) 'அறு' என்ற முன்னிலை 'அறி' என்று நின்றபின் அறிவு, அறிகை, அறிக்கை, அறிவிப்பு, அறிஞர் என்ற பலபெயர்கள் அதனின்றும் தோன்றின.

(தொடரும்)

K. P. சந்தோஷம் B.A., L.T.

---

# இலக்கண விளக்க உரையாளர் யார்?

சுவாமிநாத தேசிகர் தமது இலக்கணக்கொத்து என்னும் நூற்பாயிரத்தே,

" நூல் செய்தவனந் நூற்குரை யெழுதல்
முறையே யெனிலே அறையக் கேள்நீ
முன்பின் பலரே யென்கண் காணத்
திருவா ரூரிற் றிருக்கூட் டத்திற்
றமிழ்க்கிலக் காகிய வயித்திய நாதன்

இலக்கண விளக்கம் வகுத்துரை யெழுதினன்
அன்றியுந் தென்றிசை யாழ்வார் திருநக
ரப்பதி வாழுஞ் சுப்பிர மணிய
வேதியன் றமிழ்ப்பிர யோக விவேகம்
உரைத்துரை யெழுதினன் ஒன்றே பலவே"

என்று கூறிப் போந்தனர். நூலும் உரையுமாக இலக்கணக் கொத் தியற்றுவான்புக்க ஆசிரியர் தாம் இங்ஙனம் இயற்றுவது பொருத்தமே யென்று காட்டுதற்கு இது கூறினர். எனினும், நூல்செய்தவரே அந்நூற்கு உரையும் எழுதுதல் வழக்கா றன்று என்பதனை, அவர் 'முறையே?' என எழுப்பிக்கொண்ட ஆசங்கையே விளக்காநிற்கும்; என்னை? வழக்குப் பயிற்சி யுள்வழி ஆசங்கைக்கு இடனின்மையின். 'முன்பின்பலரே' என அவராற் கருதப்பட்டார் யாவரோ அறியகில்லேம். இலக் கணவிளக்க ஆசிரியராகிய வைத்தியநாத தேசிகர் தாமே அந்நூற்கு உரையும் இயற்றினராவரோ என்பதே இங்கு ஆராய்தற்பாலது. சுவாமிநாத தேசிகரோ 'என்கண்காண...... வயித்தியநாதன் இலக்கணவிளக்கம் வகுத்துரை யெழுதினன்' என்கின்றனர். இதனால் இவ்விருவரும் ஒருகாலத்தின ரென்ப தும், இலக்கணக்கொத் தியற்றப் புகுமுன் இலக்கணவிளக்கம் இயற்றப்பட்டு விட்டதென்பதும் புலனும். இலக்கணவிளக்கத் திற்குச் சூறாவளியென்னும் மறுப்புரை யெழுதிய சிவஞான யோகிகளும் வைத்தியநாத தேசிகரே தமது நூலுக்கு உரையும் எழுதினர் எனக் கொண்டுள்ளார். இது, சூறாவளியின்கண் 'எழுத்ததிகார மென்புழி அதிகாரம் முறைமை யென்றார்', 'உயிர்த்தல் என்பதற்கு ஒலித்தல் எனப் பொருளுரைத்தார்' என்றிங்ஙனம் இலக்கண விளக்க உரையைப் பல்லிடத்து எடுத்து மறுத்தலாற் பெறப்படும். இலக்கண விளக்கப் பாயிர வுரையியற்றினாரும் அவரே யெனச் சிவஞானமுனிவர் துணிந் திருப்பது அவர் சூறாவளியின் கண் 'பாயிரஞ்செய்தார் சதாசிவ நாவலரென்றன்றே ஆண்டுரைத்தார்' என எழுதியிருப்பதனால் அறியலாகும். சதாசிவ நாவலரியற்றிய சிறப்புப் பாயிரமும்

“ இலக்கணவிளக்க மென்றொருபெயர் நிறீஇப்
புலப்படுத் தியலுறப் பொருள்விரித் துரைத்தனன்
.......................................
நலம்படு வைத்தியநாத தேசிகனே”

என்று கூறு நின்றது.

இனி, இலக்கண விளக்கத்தையும், வேறுபல தொன்னூல்களையும் வெளிப்படுத் துதவிய சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் தாம் எழுதிய இலக்கணவிளக்கப் பதிப்புரையில் பின்வருமாறு கூறியிருக்கின்றனர் :—

‘நூற்கு உரையும் பாயிரமும் அணியியலிற் சொல்லணிச் சூத்திரங்களும் வைத்தியநாத தேசிகருடைய புதல்வர் ஐவருள் மூத்தவராகிய சதாசிவ தேசிகரால் இயற்றப்பட்டன எனக் கூறுவாருமுளர். ஆயினும் ஆசிரியரை நேரிலே பார்த்து அறிந்தவரும் மகா வித்துவானுமாகிய ஸ்ரீ கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை ஈசானதேசிக சுவாமிகள் தமது இலக்கணக்கொத்தில் ஒருரைச் சூத்திரத்தினகத்துத் தாமே தமது நூற்கு உரையியற்றியதற்கு மேற்கோளாக “என்கண்காண............ வகுத்துரையெழுதினன்” எனக் கூறுமாற்றானும்.........இலக்கண விளக்கம் மூலமும் உரையுமாகவே ஆசிரியரால் இயற்றப்பட்டதென்றும் கொள்வதே தகுதி.’

பிள்ளையவர்கள் இவண் இலக்கணக்கொத்தினை மேற்கோளாகக் கொண்டு தம்கருத்து நிலையிட்டனராயினும், அதன்கண் ஐயுறுதற்கும் இடம் செய்து வைத்தனராவர். இலக்கணவிளக்கவுரை சதாசிவ தேசிகர் இயற்றியதெனக் கூறுவாரு முளர் என்பது புலப்படுத்தினரே. பிறர் ஏன் அங்ஙனம் கூறுதல் வேண்டும்? ஒரு காலத்தின ரல்லாதல் பற்றிச் சிவஞான முனிவருரைத்தன கொள்ளா தொழியினும் ஒரு காலத்தினராய் நூலாசிரியரை அறிந்துள்ள ஈசானதேசிகரும் சதாசிவநாவலரும் கூறியவற்றை எங்ஙனம் புறக்கணித்தல் கூடும்? என்னுமிவை இங்கு ஆராய்ச்சிக் குரியன உரையெழுதினோர் சதாசிவநாவல

றென்பார் பதிகத்தையாதல், இலக்கணக் கொத்தினையாதல் படித்தறியாது கூறினாரென்றல் சாலாது. படித்தறியாதவரேல் அவர் சதாசிவ நாவலரென்று தான் எங்ஙனம் கூறவியலும்? ஆகவே அதனை நேரிலறிந்தாரிடமிருந்து வழிவழியாக வந்த செய்தியோ, அன்றி நூலுரையின்கட் காணப்படும் கருத்துக்களோ அவர் அங்ஙனம் கூறுதற்குக் காரணமாதல்வேண்டும். இனி இலக்கண விளக்க உரையினைக்கொண்டே இதனுண்மை காண்பாம். உரையின்கண் 'எழுத்திலக்கணம் உணர்த்துகின்றார்' 'ஆகுபெயரான் எழுத்திலக்கணத்தை எழுத்தென்றுங் கூறினார்' 'இந்நயம்பற்றி இவர் இலக்கணங் கூறாமையின்' 'சார்பின்பால வென்றார் இந்நூலுடையா ரென்றுணர்க' 'மெய்யை முற்கூறினார்' 'அல்வழி வேற்றுமை யென்றார்' 'இவற்றுடன் வினைத்தொகை பண்புத்தொகை அன்மொழித்தொகை என்பனவற்றையும் எடுத்து ஓதாராயினார்' 'நிறுத்தமுறையானே எழுத்துணர்த்திச் சொல்லுணர்த்துகின்றாராதலின்' 'குறிப்பும் இசையும் பண்பின் பகுதியாய் அதன்கண் அடங்குமேனும் விளங்குதற் பொருட்டு வேறு கூறினார்' பொருளிலக்கணம் உணர்த்துகின்றார்' என்றிங்ஙனம் பலவிடத்தும் நூல்செய்தவர் படர்க்கையில் வைத்துக் கூறப்படுகின்றனர்.

(தொடரும்)

ந. வேங்கடசாமி நாட்டார்.

---

## ஓர் மாறுபாடு

செந்தமிழ்ச் செல்வியின் சிலம்பு ௨, பரல் ௧, பக்கம் ௫௬-ல் ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகளைக் குறித்து ஒரு விபரீதமான செய்தி வரையப்பட்டிருக்கிறது. அச்செய்தியாவது சுவாமிகள் தம்மாணவர்க்குப் பாடங் கற்பிக்கின்ற காலத்திலும் மற்றுஞ் சொற்பொழிவு நிகழ்த்துகின்ற நேரத்திலும் தம்முன் இரண்டு பீடங்கள் இடுவித்து அவற்று ளொன்றின்மேல் திருவிளையாடற் புராணத்தையும் மற்றொன்றின்மேற் பெரிய

புராணத்தையும் வைத்துக் கொள்வார்களென்றும் தமது முடியில் நால்வர் நான்மணி மாலை யேட்டுச் சுவடியை முடிந்திருப்பார்களென்றும் கூறப்பட்டிருப்பதே.

சுவாமிகளுடைய காலம் ஏறக்குறைய நூற்றைம்பது வருடங்களுக்கு முற்பட்ட காலமாதலால் அவர்களுடைய சரித சம்பந்தமாகக் கூறப்படும் எந்த விஷயமும் அவர்கள் அருளிச்செய்த நூலுரைகளோடு மாறுபாடில்லாமலிருந்தால் மாத்திரம் கொள்ளப்படுவதாகு மென்பதை முதலில் நாம் மனத்திற் பதித்துக்கொள்ளுதல் வேண்டும். ஸ்ரீ சிவஞான சுவாமிகள் பெரிய புராணத்தையும் அதன் ஆசிரியராகிய ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளையும் தாம் அருளிச்செய்த காஞ்சிப்புராணத்திலும் சிவஞான பாடியத்திலும் மற்றுந் தனிச்செய்யுளுரையிலும் எடுத்தாண்டுபோற்றி யிருக்கின்றார்கள். திருவிளையாடற் புராணத்தையேனும் அதன் ஆசிரியராகிய பரஞ்சோதி முனிவரையேனும் அவர்கள் எடுத்தாளவில்லை. இதனால் சுவாமிகள் திருவிளையாடற் புராணத்தைத் தமதுமுன் பீடமொன்றிட்டு அதன்மேல் வைத்திருப்பார்களென்பது எந்த அளவிற் பொருந்துமென்று விளங்கவில்லை.

இனி, நால்வர் நான் மணிமாலை விஷயத்தைக் கவனிப்போம். அந்நூல் துறைமங்கலம் சிவப்பிரகாசரால் பாடப்பட்ட ஒரு சிறுநூல். இவரது சமயம் ஐக்கியவாத சைவமெனப்படும் வீர சைவம். அச்சமயம் அகப்புறச் சமயங்களில் ஒன்று. அன்றியும் சிவப்பிரகாசரே ஏகான்மவாத ஸ்தாபகராகிய சங்கராசாரியரை வேதத்தின் பொருளை யுள்ளபடி விளங்கவுரைத்தவரென்று தமது நூலொன்றிற் பாராட்டுகின்றார். இவருக்கு வசவர் இரேணுகர் முதலிய தமது ஆசாரியர்களைவிடத் திருஞானசம்பந்த சுவாமிகள் முதலிய நால்வர்களும் சிறந்தோராகார். இதன் உண்மையை அவர் பாடிய புராணத்தாலறிக. சிவஞான சுவாமிகளோ சித்தாந்த சைவ பரம்பரையில் ஞானோபதேசம் பெற்று அவ்வுபதேச வழி யொழுகிய மகாயோகிகள். ஐக்கிய வாத சைவம் ஏகான்ம வாதம் முதலிய

சமயங்களின் குறைகளை யெல்லாம் எடுத்துக் காட்டிச் சித்தாந்த சைவப் பொருள் நிலையிட்டருளிய மாபாடிய கர்த்தர். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனூர் முதலிய ஆசாரியர்களை மேலான ஆசாரியர்களென்று கொண்டவர்கள். இங்ஙனம் இருவர்க்குமுள்ள வேறுபாடு பெரிதாகவும் நால்வர் நான் மணிமாலையைச் சுவாமிகள் பாராட்டினூர்களென்றல் சிறிதும் பொருந்தவில்லை. சுவாமிகள் அம் மாலையை எங்கேனும் எடுத்தாளவுமில்லையே.

அன்றியும் சிவஞான சுவாமிகளோ சிவாகமத்திற் கூறப்பட்ட சிவதருமிணி தீக்ஷை பெற்று தலைமுடி வையாதிருந்த மகந்நிய ரென்பது பிரசித்தம். இங்ஙனமாகவும் சுவாமிகள் அந் நால்வர் நான் மணிமாலை யேட்டுப் பிரதியை முடிந்துகொள்வதற்கு முடியேது? சுவாமிகளுக்கு முடியிருந்ததா இல்லையா? என்னும் விஷயத்தைத் தெரிவதற்கு அதிக தூரம் போதல் வேண்டாமே. நமது சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திலிருந்து வெளியிடப் பட்டிருக்கும் சிவஞான சுவாமிகள் திருவுருப் படத்தைப் பார்த்தலொன்றும் போதுமே. அத் திருவுருவம் சுவாமிகளின் சாயல் பெற்றதொன்று தானு வென்னும் ஐயமும் வேண்டாம், சுவாமிகளின் மாணுக்கர்களில் ஒருவராகிய சுப்பிரமணிய முனிவர் பிரதிட்டை செய்து வழிபட்ட சிலாமூர்த்தியின் படிச்சந்தமே அத்திருவுவப் படமாதலின்.

அன்றியும் ஒரு நூலைச் சிரசில் முடியிட்டு வைத்துக்கொள்ளுதல் அந்நூலில் தமக்குள்ள பற்றை வெளியிடும் முறைகளில் ஒன்றென்பது ஸ்ரீ சிவஞான சுவாமிகள் கருத்தாயின், 'மெய் கண்டானூல் சென்னியிற்கொண்டு' என்பதற்கு 'மெய்கண்ட தேவன் மொழிபெயர்த் துரைத்தருளிச் செய்த சிவஞான போத நூலை'ச் சிரசிற்கொண்டு என்று அவர்கள் உரை கூறியிருக்கலாமே. அவ்விதங் கூறுமல் 'சிவஞானபோத நூலை ஏனையாசிரியன்மார் செய்த பிரமாண நூல்கட் கெல்லாஞ் சிரத்தானமாகக்கொண்டு' என்று உரைகூறி 'சென்னியின் இன் உவம வுருபு' என இலக்கணக்குறிப்பும் அருளிச் செய்திருக்கிறூர்கள்.

இவ்விதம் அருளிச் செய்திருப்ப தொன்றே ஒரு நூலைச் சிரசில் முடியிட்டுக் கொள்ளுதல் வழக்கமில்லாத தென்றும் வேண்டத் தக்கதன்றென்றும் காட்டுகிறதன்றோ.

இவ்வாறெல்லா மிருப்பவும், அகப்புறச் சமயங்களில் ஒன்றாகிய ஐக்கியவாத சமயத்தினரும் ஏகான்மவாதஸ்தாபகராகிய சங்கராசாரியரை மிகவும் பாராட்டுகின்றவரும் வசவர் இரேணுகர் முதலியவர்களையே சிறந்தோர்களாக மதிப்பவருமாகிய சிவப்பிரகாசர் பாடிய ஒரு சிறுநூலைச் சித்தாந்த சைவ மாபாடிய கர்த்தரும் ஐக்கியவாத சைவம் ஏகான்மவாத முதலிய சமயப் பொருள்களின் பொருந்தாமை விளக்கியருளியவரும் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் முதலிய நால்வர்களையும் தமது குலதெய்வமாக வழிபடுபவர்களும் சிவதருமிணி தீக்ஷை பெற்றுத் தலைமுடியில்லாதிருந்த பெரியாருமாகிய ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் தமது முடியில் முடியிட்டிருந்தார்களென்பது எவ்வளவோர் அசங்கதம்.

'ஒப்பிலா மலடி பெற்ற மகனொரு முயற்கொம் பேறித்
தப்பிலா காயப் பூவைப் பறித்'

தானென்று பெரியோர் வழங்கும் பழஞ்சொல்லை இவ்விஷயங் கூறினா ரிருவரும் புதுக்கினாராவர்.

அன்றியும் திருவாவடுதுறையாகிய ஞான ராஜதானியின் பூர்வீக வரலாற்றையும் திருவா வடுதுறை யாதீனத்தின் இரண்டாவது மகாசந்நிதானமா யெழுந்தருளியிருந்து உலகுடைய நாயனார் பெரியபிள்ளை முதலாயினார்க்கு ஞானோபதேசம் புரிந்து அநேக ஞானநூல்கள் அருளிச் செய்த 'ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள்' ஐக்கியவாத சமய கண்டனமாக அருளிய 'பாஷாண்ட நிராகரணம்' என்னும் நூலையும் அறிந்தவர்கள், பரம்பரை யொழுக்கத்துக்கு விரோதமாக எவர் யாது கூறினும் அதன் பொருந்தாமையை நன்குணர்வார்கள். ஏனையோர் அக்கூற்றால் மயங்காவண்ணம் இஃ தெழுதப்படலாயிற்று.

வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை.

# மதிப்புரை

நவரசமஞ்சரி இது சென்னையில் பிரசுரமாகும் ஓர் தமிழ் மாதப் பத்திரிகை. இதன்கண் வில்லி பாரதச் செய்யுட்களை ஆதி தொடங்கி உரை விசேடங்களோடு பிரசுரித்துவருவது பெரும்பாகமாகியும் நீதி முதலிய பொருள்களைச் சுருக்கமாயும்கொண்டு இது வெளிவருகிறது. பாரதச் செய்யுள்நூல் கற்க விழையும் மாணவர்க்கு இப்பத்திரிகை பயன் தரத்தக்கது. இதன் கர்த்தர் திருவாளர் எ. எம். போரூரான் செட்டியார் அவர்கள். இதன வருட சந்தா ரூ. 5-8-0.

அன்பின் மாட்சி:—இந்நூலாசிரியர் சென்னை முத்தியாலுப் பேட்டைக் கல்லூரித் தமிழாசிரியர் திரு. சிவமுத்துக்குமாரசுவாமி முதலியாரவர்கள். மக்களுக்கு உறுதி பயக்கும் அன்பின் திறமையினை மாணவர்க்கு இனிது விளங்குமாறு எளிய இனிய செந்தமிழ் நடையில் இதன்கண் ஆசிரியர் திறம்பட நன்கு விளக்கியுள்ளார்கள். விலை அணா 8

கிடைக்குமிடம்:— வி. பி. கண்ணன் அண்டு கம்பெனி,
சைதாப்பேட்டை.

'பாலர் மித்திரன்' சிறுவர்க்கென்றே வெளிவரும் இப்புதிய திங்கள் இதழ் மிகக் குறைந்த பொருட்செலவில் அரிய பொருள்களை அறிவதற்குத் தக்கதாக விளங்குதல் எமக்கு மகிழ்ச்சியை ஊட்டுகிறது. இது சிறுவர் கவர்ச்சியின் பொருட்டுக் காட்சிப்படங்கள் சிலகொண்டு நல்ல தாளில் அச்சிடப்பட்டு அழகிய உருவிலே வருவதற்கும் கையொப்ப நண்பர் அளவற்றவர் சேர்வாராயின் இது நலம் பல விளைக்கும்.

ஆண்டுக் கையொப்பம். ரூ. 1

கிடைக்குமிடம் :— இந்து கலாபிவிருத்தி சங்கம், கொழும்பு.

'திருக்குறள் விளக்கம்' தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த திருக்குறள் கடல்போலப் பரந்தாழ்ந்த நுண்ணூல் என்பது நட்டார், பகைவர், நொதுமலர் என்னும் முத்திறவரானும் ஒத்துக் கோடற்பாலது. திருக்குறட் கருத்தைப் பரிமேலழகர் உரையுடனும் எடுத்துக்காட்டுக்கள் பலவுடனும் நன்கு விளங்கும் பொருட்டுத் 'திருக்குறள் விளக்கம்' என்னும் பெயரால் தமிழ்ப் புலமையும் சைவ சித்தாந்த சாத்திரப் பொருளுணர்ச்சியும் உடைய திருவாளர் சி. குப்புசாமி முதலியார் அவர்கள் உபந்நியாச வடிவத்தில் எழுதி வெளியிட முற்போந்தது எம்மனோர்க்கு பெருமகிழ்ச்சியைத் தருகிறது. அதன் முதற் சஞ்சிகையைக் கண்ணுற்றோம். இங்ஙன் முயற்சி முட்டின்றி இனிது முடியுமாறு இதனை அறிஞர் ஆதரிக்க வேண்டுமென விழைகின்றோம். விலை அணா 4.

கிடைக்குமிடம் :— கா. ரா. காளத்தீஸ்வர முதலியார்,
13, கிருஷ்ணப்ப மேஸ்திரி தெரு, சென்னை.

---

Printed at the 'Sivakami Vilasam' Press, & Published by
V. Subbiah for the S. I. S. S. W. P. Society Ltd, Madras.